உ
சிவமயம்

ஜோதிஷ சாஸ்திரம்

என்னும்

# மரணகண்டி சாஸ்திரம்





சரஸ்வதி புத்தகசாலை
175, செட்டியார் தெரு.
கொழும்பு.
1958



ரு. 1-00

உ

சிவமயம்

ஜோதிஷ சாஸ்திரம்

என்னும்

# மரணகண்டி சாஸ்திரம்






இது

திருமயிலை - குழந்தையானந்த சுவாமிகள்

சிஷ்யராகிய பிட்சைப்பாக்கம்—கணித நூற்புலவர்

மார்க்கலிங்க ஜோதிஷர்

அவர்களால்

பரிசோதித்த பிரதிக்கிணங்கியது.





சரஸ்வதி புத்தகசாலை

175, செட்டியார் தெரு,

கொழும்பு.

இதன்விலை] 1958 [ரூ. 1—00

## ருதுநூல் சாஸ்திரம்

[கா. தெய்வசிகாமணி சோதிடர் எழுதியது]

இதில் ருது உற்பத்தியும் கால் அமைப்பும், அடையாளங்களும் 12 பாவ விசேஷத்தால் தன் வாழ்க்கை விஷயம் புத்திர விஷயம் பர்த்தா விஷம் பொருள் விஷயங்களும் மாதபலன்—நக்ஷத்திர பலன்—திதிபலன் வாரபலன் இலக்கின பலன் என்னும் முக்கிய விசேஷங்களும் குணதிசயமும் சுமங்கலி அமங்கலி என்னும் இரகசிய விசேஷங்களும் ருது தோஷ பரிகாரங்களும் அவற்றிற்குரிய சக்கரங்களும் விவரித்து விரிவாய் எழுதி அச்சிடப்பட்டிருக்கிறது.

விலை ரூ. 1—25

## நவக்கிரஹ தோத்திரம் விலை ரூ. 1.

நவக்கிரகங்களின் தோத்திரப் பாடல் ஆலயங்களில் நவக்கிரஹ பிரதக்ஷணஞ் செய்யுங்கிரமம் நவக்கிரஹ தேவதைக்குரிய பாட்டுக்கள் விரதம் நைவேதனம் ஆகுதி மந்திரம் தோத்திர மந்திரம் பூஜை மந்திரம் 1008 நாம அஷ்டோத்திர அர்ச்சனை முதலியன அடங்கியிருக்கின்றன.

## திசா புக்தி அந்தர பலன் விலை ரூ. 1—50

ஒவ்வொரு கிரகங்களின் தன்மைகளோடு, அவரவர்களின் திசா புத்தி, அந்தரங்களில் எந்தெந்த நிலைமையில் எந்தெந்தப் பலனைத் தருவார்களென்பதை விரித்துத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது.



## அனுபோக ஜாதக ரகசியம்

விலை ரூ. 2—50

கிரகசார சக்கரத்துடன் கூடிய இந்த ஜாதக ரகசியத்தை ஜோசியர்களும் சாதாரண மற்றவர்களும் சுலபமாகத் தெரிந்துகொள்ளுதற்காக ஜாதகம் கணிக்கவும், ராசி கணிக்கவும் அஷ்டவர்க்கம் கணிக்கவும் கோசாரம் முதலிய பலாபலன்களும் திசாபுத்தி அந்தரபலன்களும் கண்ணாடிபோல் விளக்கி எழுதியிருக்கிறது. இந்த ஒரு புத்தகமே ஜோதிடத்திற்குப் போதுமானது.

## சோதிட பிரஞ்ஞான தீபிகை விலை ரூபாய் 5—00

இந் நூலானது லக்னமுதல் 12 பாவங்களுமுள்ள பலன்களைச் சோதிஷம் அறிந்தவர்க்கும் அறியாதவர்க்கும் எளிதில் விளக்கிக் காட்டக்கூடிய ஒரு வசன நூலாக இருக்கிறது. இந்நூல் ஒவ்வொரு மனிதரிடத்திலுமிருந்தால் அவரவர் வாழ்நாட்களில் வரும் நன்மை தீமைகளைச் சுலபமாக சோதிடர்கள் உதவியில்லாமலே அறிந்து கொள்ளலாம். கிடைக்குமிடம்;—

**சரஸ்வதி புத்தகசாலை**

175, செட்டியார் தெரு, கொழும்பு,

உ

கணபதி துணை

# மரணகண்டி சாஸ்திரம்

## அசுவினி நட்சத்திரத்தின்

### அதிதேவதை முதலியவைகள்

சூ-சே-சோ-லா-அசுவினி

இந்நாளின் பலன்

செய்வினை தெரிந்து செய்யவேயார்க்கு நல்லன்
மையறுமணியும்பொன்னு மகிழ்ச்சியாயணியவல்லன்
பொய்யுரையொன்றுஞ் சொல்லான் புகழ்பெறவாழவல்ல
னையமிட்டுண்ணவல்ல னசுவினிநாளினானே.

மேஷராசியின் பலன்

வடவரையாயவல்லன் வஞ்சகமனத்தனாகு
மடமொடுகெடுதிசொல்ல நௌவியமிகவுமுண்டாம்
வடமொடுமணியும்பூவு மகிழ்ச்சியாயணியவல்ல
னிடாதுபுரியவல்ல னினியதோர்மேடத்தானே.

இப்பலன்

அசுவினி-பரணி-கிர்த்திகை-நாலுங்கொண்டது மேஷமாதலால்
அவ்வொன்பது பாதத்திற்குங் கொள்க.

அதிதேவதை முதலியவைகள்

இந்நாளினுக்கு தெய்வம்-விக்கிநேஸ்வரன், யோகினி-மகேஸ்வரி, ஜாதி-பிராமணன், பூதம்-பிரிதிவு, யோனி-ஆண்குதிரை, கணம்-தெய்வம், விருட்சம்-எட்டி, பட்சி-இராஜாளி, பாதத்தில்-கயிறு, இந்த நட்சத்திரம் குதிரைத்தலை போன்றிருக்கும் இந்நாளினுக்கு 15-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம், சித்திரைமீ சூனியம்.

இந்நாளில் விதையெடுக்க, தெளிக்க, மனைகோல, விவாகஞ் செய்ய, பொன்பூண, கானப்பண்ண, வாழைவைக்க, தெய்வபூசை செய்ய, கோடியுடுக்க இவை முதலான சகலகாரியத்துக்கும் நன்று.

இந்நாளில் பிரதேசம்போகலாகாது. போகநேரிட்டால் பாலுஞ் சோறும புசித்துப் போகவும்.

இந்நாளில் வருஷம் பிறக்கில் அகந்தாழும் வியாதி தோன்றில் பத்து நாளில் விடும், விடாதபோதுபரிகாரம். நெய்யாலே ஓமஞ்செய்து அரசங் கொழுந்தும் கருப்பஞ்சாறும் கலந்து நீர்க்கரையில் விட்டு விருட்சத்தடியில் வியாதிகட்குரிய உச்சாடனம் செபித்து சமித்தால் ஓமம்பண்ணவும்.

இந்நாளிற் பிறந்தவன் இலட்சணமுடையவன், முன்கோபி, வித்தையுடையவன், பெருமையுடையவன், மூக்கு உயர்ந்திருக்கும், சிமோனு விருப்பான், தாம்பூலப் பிரியன், பாட்டு கூத்து பூசை விருப்பமுடையவன், அலங்காரமுடையவன், பிரிய பக்தியுடையவன், புளிக்கறி சாகாதிகளில் விருப்பமுடையவன், ஸ்திரீகட்கனபன், பசிபொறுன், மனிதர் பிரியமுடையவன், மார்பு நெற்றி உயர்ந்திருக்கும். உத்தமகுணத்தன் முன்புறங்களிலும் பாதத்திலும் முகத்திலும் மருவுண்டு.

அசுவினி முதற்கால் மேஷச் செவ்வாயின் பலன்

குருகியவுருவுமெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன்பெண்மேல் வன்பொருள்சாரநில்லான்
முருகியகொடுமைசெய்வான் முதுகிலேசுழியுமுண்டாம்
சிரிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மேஷச் செவ்வாய் 7. ரிஷப வெள்ளி 16 மிதுன புதன் 9 கடக சந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னி புதன் 10 துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7, தனுசுவியாழம் 10 ஆக வயது 100.

இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேழையரைப்பேணு
மெள்ளியகண்ணில்வேளா னுட்பொருள்சாரநில்லான்
பள்ளியிற்பலவுங்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புடைக்கருத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மகரசனி 4, கும்பசனி 4 மீன வியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7. துலாம்வெள்ளி 16, கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5, கடகசந்திரன் 21, மிதுனபுதன் 9 ஆக வயது 85.

மூன்றாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையனழகன்சால வேந்தரால்விருப்பமுண்ட
மாதுமாலுருவமாகு மனம்பொறுக்கரியவொண்ணுன்
ரூதுசேர்குழலாடன்மேற் றன்பொருட்சாரநில்லான்
மீதுறைவலக்கைவேலான் மிதுனவங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச் செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 ஆக வயது 83,

நான்காங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியோனுகு
மலைதரும்வல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்ருய்க்கற்குங் கடிமதிகாளையாகு
மலைமெனவளர்த்ததோளான் மதியினங்கிசத்தினனே.

## இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9, துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10, மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 ஆக வயது 86.

## இனி மகாதிசை

கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 9 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 இராஜா 16 சனி 19 புதன் 17 ஆக வயது 126. கேதுவின் திசையால் கண்டம், அன்றியும் 5 ல் வெதுப்பால் 8 ல் சிலந்தியால் வயிற்று நோவால் 13 ல் கண்ணோயால் 16 ல் வயிற்று நீரால் 21 ல் விஷத்தால், 37 ல் ஸ்திரிகளால் 40 ல் நாற்காலல் மிருகத்தால், மருந்திடு கருவியால் 42 ல் இராஜாவால் 70 ல் சத்துருக்களால் 83 ல் வெதுப்பால் வயிற்றுக் கடுப்பால் 86 ல் மூலவியாதியால் கண்டம், 95 ல் வயது புகுந்து சித்திரை மீ பூர்வபக்ஷம் திரயோதசி செவ்வாய்க்கிழமை உரோகணி நாளுதித்து 7 நாளிகையில் நாற்கால் மிருகத்தால் மரணம்.

## இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சீமானவான்
சந்திரனுதயமாகில் அமுதவாக்குடையவன் தனவானவான்

செவ்வாயுதயமாகில் அழகும் செம்மையும் வெகுவித்தையும் பண்டிதனும் பிரபுமாவான்.

புதன் உதயமாகில் கல்வியுடையவன்
வியாழமுதயமாகில் மந்திரியாவான்
வெள்ளிஉதயமாகில் தரித்திரன்

இந்த நட்சத்திரம் உச்சமாகில் கடகசந்திரனில் 4 நாழிகை செல்லும்.

அசுவினி நட்சேத்திரத்தின் பலன் முற்றிற்று

---

# பரணி நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

---

லீ-லூ-லே-லோ-பரணி

தானங்கள்விரும்பிச்செய்யுந் தந்தைதாய்மிகவும்பேணும்
ஞானமும்விரும்பிக்கற்கு நற்றமிழ்விரும்பிக்கேட்கு
மானமதுடையோனாகும் வருநிதிபொருந்திவாழும்
போசனச்செல்வமுண்டாம் புகழ்பெறுபரணியானே.

இந்நாளினுக்கு தெய்வம்–ஆதித்தன் பூதம்–பிருதிவு, ஜாதி–க்ஷத்திரியன் கோத்திரம்–விஸ்வாமித்திரன் யோனி–யானை பட்சி–காகம். விருட்சம்–நெல்லி கணம்–மனுஷன் முழங்காலில் கயிறு.

இந்நாளிற் பிறந்தவன் போகனுமிருப்பான், முன்கோபி வித்தைக்கு நல்லவன் வழிபாடுடையவன். அழகன் மூக்கு உயர்ந்திருக்கும்.

இந்நாளில் பெண் திரளில் பெண் பெறுவாள். வருஷம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளினுக்கு 20 நாளிகைக்கு மேல் 4 நாழிகை விஷம் வெதுப்புத் தோன்றில் 5 நாளில் தத்து. இதற்கு பிழைத்தால் 45 நாளில் மரணம்.

இதற்குப் பரிகாரம் தேனும் நெய்யுங்கொண்டு ஓமம்பண்ணி சீரகத்தால் பலியிட்டு கஜதானம் செய்யவும். 3 நாழிகையில் பொருக்கும். கர்க்கடகம் தனுசுக்கு புதுநெல்கொண்டு அகம்புகுவது.

## முதற்கால் சிங்காதித்தன் பலன்

நாளுமேசெல்வமாவா னயபய மெண்ணிச்செய்வன்
மாளிகைமனையில்வாழ்வன் மன்னரான் மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கன்னியன்பன் வலக்கையின் மருவுமுண்டாங்
காளிசேர்வடிவனுகுங் கதிரவன் காலினுனே.

## அதற்குக் காலசக்கரம்

விருச்சிகம் செவ்வாய் 10 துலாம் வெள்ளி 19 கன்னி–புதன் 9 கடக சந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 19 மேஷச் செவ்வாய் 7 மிதுன வியாழம் 10 ஆக வயது 100.

## இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராற்பலனுமுண்டாந்
சுந்தரப்பலன்கடோன்றுந் தோளிலேமறுவுமுண்டா
மந்தரப்பொய்கள்சொல்லு மரும்பொருணெருங்கிவாழும்
புந்தியிற்பெரியனுகும் புதனினங்கிசத்தினுனே.

## இதற்குக் காலசக்கரம்

கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 0, மேஷச் செவ்வாய் 7 ரிஷப வெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னி புதன் 8 ஆக வயது 85.

## மூன்றுங்கால் துலாம்வெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமறுவுமுண்டாஞ்
சீர்தருமுத்திபேனுஞ் செம்தருங்கொடுங்கனுன
ஞதாவுடையனுகு மறிவுடன்வித்தைகற்பன்
சார்வதுமாதர்தம்பாற் றரும்புகர்க்காலினுனே.

## இதற்குக் காலசக்கரம்

துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசு வியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷப வெள்ளி 16 கன்னிபுதன் 6, ஆக வயது 83.

## நாலாங்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

படையமணிந்ததோளான் பண்டக்கொலாந்தலைவனும்
வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன்னுடையனுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழ்வன் சிறுகுறியாளனுந்
திட்டெனக்கருமஞ்செய்வான் சேயினங்கிசத்தினானே.

### இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16, மேஷ செவ்வாய் 7 மீன வியாழம் 10 மேஷசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 ஆக வயது 86.

### இனி மகாதிசை

சுக்ரன் 20 சூரியன் 9 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ராஜா 16 சனி 19 புதன் 17 கேது 7 ஆக வயது 120.

இந்நாளில் பிறந்தவன் எத்தனுயிருப்பான். சவுந்தரியன் உடல் அலுத்திருக்கும். பலபுத்தியுடையவன், கடுநடையுடையான், மேல் வாய் சிவந்திருக்கும். சந்திர பலமுடையவன், பொய்சொல்லான் ஆகாரமுடையவன், இடதுபுறத்திலே மறுவுண்டு, நித்திரைபிடியான், பாக்குவெற்றிலைப் பிரியன், அற்பன் கபடுடையன், ஸ்திரிகளுக்கு நல்லவன், முன்னுசையுடையான சுகந்தன்.

இவன் பிறந்ததாண்டில் கண்டம் 7 ல் சுரத்தால் 15 ல் உதிர வியாதியால் 22 ல் மருந்திடுதலால் 25 ல் யானையால் அல்லது மிருகத்தால் 27 ல் வயிற்று நோயால் 30 ல் ஸ்திரிகளால் 34 ல் சத்துருவால் 41 ல் விஷத்தால் 50 ல் மகோதரத்தால் 52 ல் வயிற்றுக் கடுப்பால் 56 ல் மூலவியாதியால் 64 ல் விலக்கா வெக்கையால்.

இவை கடந்தால் 86-வயது சென்று சித்திரை மீ அமரபட்சம் திரிதிகை இங்கட்கிழமை பரணி நட்சத்திரம அஸ்தமித்து 9 நாழியில் வெதுப்பு தோன்றி மரணம்.

இவை கடந்தால் 87 வயது சென்று பூர்வபட்சம் சனிக்கிழமை ஏகாதசி கேட்டை நட்சத்திரமுதித்து 2 நாழிகையில் மரணம்.

இவனுக்கு சூரியனுதயமாகில்—அழகுடையவன் கள்வனுவான்,
சந்திரனுதயமாகில்—இராஜபுருஷன் தனவான்.
செவ்வாயுதயமாகில்—கோளன்
புதனுதயமாகில்—சேனாதிபதி
குரு உதயமாகில்—இராஜா
வெள்ளி உதயமாகில்—மந்திரி
சனி உதயமாகில்—மந்தன் குருடனுமாவான்
ராகு உதயமாகில்—மூடவன் விஷகாரியுமாவான்
கேது உதயமாகில்—பிரபலமுடையவன் மந்திரியுமாவான்
இந்நாளில் பயிரிடலாம்

### பரணி நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

# கார்த்திகை நட்சத்திரத்தின்
## ஆதிதேவதை முதலியவைகள்

### ஆ-ஈ-ஊ-ஏ-கார்த்திகை இந்நாளின் பலன்

வார்த்தைகளுடையனுகும் வழக்கறிந்துரைக்கவல்லன்
கூர்த்தகமனத்தனுகுங் குணமுடைக்கிளையனுகும்
போர்த்ததுகுறியனுகும் புகழ்பெறப்பொருளுந்தேடுங்
கார்த்திகைநாளிற்ரேன்றுங் கருத்துளகாளைதானே.

இந்நாளினுக்கு யோனி—வெள்ளாடு, விருஷம்—அத்தி பட்சி-மயில் கணம்—இராட்சதன் தெய்வம்—அக்னி பகவான் பூதம்—தேயு 30 நாளிகைக்கு மேல் 4 நாளிகை விஷம் வைகாசி மாதம் சூனியம்.

இந்நாளில் ஆடுகொள்ளலாம் பெண் திரளில் மலடியாவாள் வருஷம் பிறக்கில் அகந்தாழும்,

இந்நாளில் சுரம் தோன்றில் பத்துநாளில் விடும் விடாதிருந்தால் பரிகாரம்.

அரசமரத்தடியில் நெய்யினல் ஓமம்பண்ணி தயிருஞ்சோறும் பலியிடவும்.

### முதற்கால் மேஷராசி தனுசு வியாழபலன்

சிறிதேயொன்றும்பொய்சொல்லான் சிவந்தகண்ணன்சிறுதழலா
னறிவுமிகவேபெறுங்குணத்தா னடைந்தோர்க்கன்பனழகியனும்
பொருள்சேர்மைந்தர்மனையாளைப் பொருளென்றெண்ணுன் புகழ்விள
வெறிசேர்குழலாய்மடமாதே வியாழக்காலிற்பிறந்தானே. [ங்கும்

இதற்குக் காலசக்கரம் மேஷ செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடக சந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 துலா வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசு வியாழம் 10 ஆகவயது 100

### இரண்டாங்கால் மகாசனியின் பலன்

ஆரியமறைகள்கற்கு மரும்பொருளுயருமீதில்
சீரியசெய்யவேண்டான் சிவனைவதைப்பனல்லால்
மாருடன்பொய்கள்சொல்லான் மனம்பொறுக்கரியவொண்
காரியங்குசல்வனுகுங் காரியங்கிசத்தினுனே. [ணு

இதற்குக் காலசக்கரம் மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மிதுனபுதன் 9 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 கன்னி புதன் 9 கடக சந்திரன் 21 சிங்காதித்தன் 5 ஆக வயது 85.

### மூன்றுங்கால் கும்பசனியின் பலன்

ஊனமதுடையனுகு முறவுடன் பகையுமெண்ணுன்
மானமதுடையனுகு மனம்பொறுக்கரிய வொண்ணுன்
மேனியுமுறுவுநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் காரியங்கிசத்தினுனே

இதற்குக் காலசக்கரம் ரிஷபவெள்ளி 16 மேஷ செவ்வாய் 7 மீன வியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசு வியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 மிதுனபுதன 9 ஆகவயது 83.

## நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மனதொத்து கல்விக்கற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்ததோர் குருவுமாகும்
காய்ந்தபின் கடகமாட்டான் கண்டவர்க்குநல்லன்
சேர்ந்தவர்கள் பனுருஞ் செய்யபொற்காலினுனே

இதற்குக் காலசக்கரம் கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னி புதன் 9 துலாவெள்ளி 19 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 மீனவியாழம 11 ஆக வயது 86.

## இனி மகாதிசை

ஆதித்தன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 இராகு 18 இராஜா 16 சனி 19 புதன 17 கேது 7 சுக்கிரன் 20 ஆக வயது 120.

இந்நாளிற் பிறந்தவன் வார்த்தையில் வல்லவன், பசிபொறுன், பலகாரிய மிராசுபண்ண வல்லவன், இராசபிரதாபமுடையவன குணவான நன்றிமறவான், தெய்வபக்தியுடையவன், சுகந்தன ஸ்திரிகண்டன், இடதுபுறத்திலே மறுவுண்டு; ஆங்காரி பூமிபலிதமுடையவன். மார்புக்குமேலே மறுவுண்டு; மாதாவார்த்தைதவறுன் பொய்பேசான் கோபித்தபோதே தணிவான்.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம் 3 ல் வெதுப்பால் 5 ல் ஜலத்தால் 7 ல் நெருப்பால் 10 ல் உயரத்திலிருந்து விழுவதால் 13 ல் நாற்கால் மிருகத்தால் 15 ல் விஷத்தால் 23 ல் ஸ்திரிகளால் 27 ல் அரையாப்பால்40 ல் கள்ளரால் 45 ல் குலேவாதத்தால் 50 ல் வயிற்றுக் கடுப்பால் 55 ல் குடல்வாதத்தால் 60 ல் மூலவியாதியால் 78 ல் பித்தசுரத்தால்.

இவை கடந்தால் 80 வயது சென்று கார்த்திகை மாதம் 3—ம் உ பூர்வபட்சம் திரயோதசி சனிக்கிழமை பிறந்தநாளுதித்து 7 நாளிகைக்குமேல் மரணம்.

இவை கடந்தால் 83 வயது சென்று மார்கழி மீ அமரபட்சம் துவாதசி சனிக்கிழமை பிறந்தநாள் சதயமுதித்து ஒரு நாழிகையில் பித்தம் அதிகரித்து மரணம்.

இவையும் கடந்தால் 91 வயது சென்று வைகாசி மீ அமரபட்சம் கிர்த்திகை 7 நாழிகை சென்று பித்தங்கதித்து மரணம்.

இவனுக்கு சூரியனுதயமாகில் குணவான் மிடியன்.

சந்திரன் உதயமாகில் இராஜபுருஷன் பலபேரும் இச்சிக்கப்பட்டவன் இறப்புடையவன்.

புதனுதயமாகில் வித்துவான் வியாபாரி.

குருவுதயமாகில் இராஜபுருஷன்

வெள்ளியுதயமாகில் கிருஜிபலனும் கல்வியுமுடையவனுவான்.

சனியுதயமாகில் கள்ளனுவான்.

இராகு உதயமாகில் கள்ளன் முடன் தெய்வபக்தி யுடையவன் ஆவான்.

இராகு உதயமாகில் ஒருகண்ணன் பாக்கியவான். நோயுடையவனுமாவான்.

புதனுதயமாகில் அமிர்தயோகம்.
வெள்ளிகூடில் சித்தயோகம்.
ஞாயிறும் பஞ்சமியுங்கூடில் விஷயோகம்.
நவமியும் குருவுங் கூடில்பிராணயோகம்.
பிரதமைகூடில் வரயோகம்.
இந்நாள் தெசுனம்பிள்ளை வைக்க தானங்கொடுக்க நன்று.
தயிருஞ்சோறுமுண்டு வழிபோவது நன்று

கார்த்திகை நட்சத்திரத்தின் பலன் முற்றும்.

---

# உரோகணி நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

---

ஒ-வா-வூ-வீ உரோகணி

### இந்நாளின் பலன்

மைவிழிமாதரோடு மனமிகவுடையனாகும்
பொய்யுரையொன்றுஞ்சொல்லான்புகழ்பெறவாழவல்லன்
நெய்யொடுபாலுங்கூட்டி நிரம்பவே கல்விகற்கும்
உய்யவேபகிர்ந்திட்டுண்ணு முரோகணிநாளினூளே

### ரிஷபராசியின் பலன்

பலக்குநல்பசுமைசெய்யும் பாவமும்பழயும்பார்க்கும்
தலைக்குமேல்பொன்னதாகத்தந்தைதாய்தப்மைப்பேணும்
கலைத்திடுங்கருத்தார்தம்மைக் கைப்பொருள்கொடுக்கவல
இலக்கியமுடையனுகு மினியநல்விடபத்தானே (லன்

இந்நாளினுக்கு நட்சத்திரம் 12 மீன் ஊற்றுற்போலிருக்கும் இது உச்சமானல் சிங்கத்தில் 3½ நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு:-தெய்வம்-பிரமா யோனி-பாம்பு பட்சி-ஆந்தை விருட்சம்-நாவல் கணம்-மனுஷன் பூதம்-பிரிதிவு கோத்திரம்-அகஸ்தியன் ஜாதி-வைணவன் இந்நாளினுக்கு 50 நாளிகைக்குமேல் 4 நாழிகைவிஷம் சித்திரை மீ சூனியம்.

இந்நாளில் பிறந்தவன் குணமுள்ளவன். சொன்னது கேட்பவன் சுடுநடையுடையவன நெற்றியும் புருவமும் நெருங்கியிருக்கும் கண்விழி பரந்திருக்கும், உள்ளங்கால் உயர்ந்திருக்கும், அழகன் குருபுத்திரன் சரீரப் பருமையுடையோன், ரெணமுகமுள்ளவன். பண்டிதன், சுகந்தன், எல்லாக்காரியமுமறிந்து சொல்லுவான், இடதுபுறத்தில் மறுவுண்டு, மேல்வாயழகன்.

## இந்நாளிற் பிறந்தவனுக்கு முதற்கால் விருச்சிக செவ்வாயின் பலன்கள்

வெட்டெனப் பேசவல்லன் வெகுட்சிமுன் னுடையோனுகு
மிட்டமைத் தெரிந்துபேணு மிருகுறியாளனுகும்
பட்டயமணிந் தோளை படைக்கெலாந் தலைவனுகும்
மெட்டெனவென்னுஞான மெரியினங்கிசத்தினுனே.

### இதற்குக் காலசக்கரம்

தனுசு வியாழம் 10, மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷ செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 ஆகவயது 86.

## இரண்டாங்கால் துலாம் வெள்ளியின் பலன்

மார்பகம் பரந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுந்திபேணுந் தேய்தருங்கொடுங்கண்ணுளன்
ஆகாவுடையோனுகு மறிவுடனன்றியாருஞ்
சர்வதுமாதர்தம்மால் தரும்புகர்காலினுனே

### இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 மீன வியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனிசுவியாழம் 10 விருச்சிகசெவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 ஆக வயது 83.

## மூன்றுங்கால் கன்னிபுதன் பலன்

மேன்தையாலலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டாம்
மாதுமாலுருவமாகு மனம்பொறுக்கரியவொண்ணுன்
தாதுசேர்விழியார்தம்மேற் றன்பொருள்சாரகில்லான்
மாதுரைவலகலைவல்லன் மாலினங்கிசத்தினுனே

### இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷசெவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 ஆக வயது 85.

## நான்காங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனப்பெரியோனுகும்
பலைதருவல்லபத்தின் வடிவுடன் சிறந்தமேனி
கலைபல்நன்றிகற்குங் கடுமதிகாளையாகும்
மலையெனவளர்ந்தோளான் மதியினங்கிசத்தினுனே

### இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 ஆக வயது 86.

## இனி மகாதிசை

சந்திரன 10 செவ்வாய் 7 இராகு 18 இராஜா 16 சனி 19 புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 6 ஆக வயது 120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம் 3 ல் வெதுப்பால் 5 ல் ஜலத்தால் 7 ல் எதிரியால் 9 ல் உயரத்திலிருந்து விழுவதால் 10 ல் நாற்கால் மிருகத்தால் 16 ல் விஷத்தால் 18 ல் நெருப்பால் 23 ல் மருந்திட்டால் 32 ல் சூல்வாதத்தால் 55 ல் கள்ளரால் 57 ல் நீரால் 60 ல் வயிற்றுக் கடுப்பால் 65 ல் நீர்பட்டால் 69 ல் நோயால்.

இவை கடந்தால் 86 வயது சென்று மாசி மீ பூர்வபட்சம் நவமியும் ஞாயிற்றுக்கிழமையும் பிறந்த உரோகிணி நாள் உதித்து 7 நாழிகையில் சுரத்தால் மரணம்.

இவை கடந்தால் 91 வயது சென்று வைகாசி மாதம் அமரபட்சம் திங்கட்கிழமை பிறந்து அஸ்தநட்சத்திரம் உதித்து 7 நாழிகை சென்று ஜன்னிவாத வயிற்றுநோயால் மரணம்.

## இவனுக்கு

ஆதித்தனுதயமாகில் இராஜபுருஷன்
சந்திரனுதயமாகில் சிபாந்திரமாளுவான்.
செவ்வாயுதயமாகில் கள்ளனுவன. கோபமுடையோன்,
புதனுதயமாகில் பண்டிதனுவன்.
வியாழமுதயமாகில் மந்திரியும் வித்துவானுமாவன்.
வெள்ளி உதயமாகில் அறிவுடையோன் சிரசு வலிக்கும்.
சனியுதயமாகில் கள்ளனுவன்.
இராகு உதயமாகில் முடவனும் மிடியனுமாவன். கேது உதயமாகில் விஷகாரியும் துஷ்டனுமாவன.
இந்நாளில் வியாழன் கூடில் விஷயோகம்.
வெள்ளிகூடில் நாசயோகம்.
சனி கூடில் மித்திரயோகம்.

இந்நாளில் பூஞ்சோலைவைக்க, தொட்டிகட்ட, நமஸ்காரம்பண்ண அன்னப்பிராசனஞ்செய்ய கிணறுவெட்ட புதியதுண்ண கோடியுடுக்க நன்று.

இந்நாள் முதற்காலில் நெல்விதைக்க நன்று

இந்நாளில் மாதம் பிறக்கில் அகந்தாளும், சுரந்தோன்றில் ஆறு நாளில் விடும், விடாதிருந்தால் இந்நாளில் அடுத்த விருச்சத்தடியில் அல்லது நீர்கரையில் தேவதையை நோக்கி நெய்யால் ஓமஞ்செய்து இரதம் கந்தம் புஷ்பம் பலியிடவும்.

இந்நாளில் பிறந்தவன் பிரயாணம் போவதாயிருந்தால் பாலுஞ் சோறும் புசித்துப் போகவும்.

உரோகணியின் பலன் முற்றிற்று.

# மிருகசீரிட நட்சத்திரத்தின்

## அதிதேவதை முதலியவைகள்

### வே-வை-கா-கி-மிருகசீரிடம்

### இந்நாளின பலன்

திருந்தியநடையனூரு தேசம்போய்த்திரியவல்ல
னருந்தளத்தோர்சூநல்ல ஆயுதம்பிடிக்கவல்ல
னிருந்ததுபூசைசெய்து நீருகநதாடவல்லன்
வருந்தியேகருமஞ்செய்வன் மான்றலைநாளினானே

இந்த நட்சத்திரம் மூன்றும் தேங்காய்கண் போலிருக்கும். இது உச்சமானல் கன்னியில் 4 நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி–சாரைப்பாமபு. பட்சி–கானங்கோழி. விருட்சம் கருங்காலி கணம்–தெய்வம் நாள்–பெண் தெய்வம்–சந்திரன்.

இந்நாளினுக்கு 4 நாளிகைக்கு மேல் விஷம் 4 நாழிகையில் நிற்கும் கார்த்திகை மீ சூனியம்.

இந்நாளினனுக்கு நெற்றி பரந்திருக்கும் மூக்கு உயர்ந்திருக்கும், உடம்பு பூரித்திருக்கும், கல்வியுடையவன், அழகன், இவனது மனதை ஒருவரால் அளவிடப்போகாது. தெய்வபக்தியுடையவன், பாக்கு வெற்றிலைப் பிரியன். பாட்டு கூத்தில் விருப்பமுடையவன், பூசை முடிக்க வல்லவன். பலருடன் வாழ இச்சையுடையவன். ஸ்திரி கள்ளன். கோபமுடையவன், கோபித்தபொழுதே ஆறுவான், இராஜாபிமானன், இவனுக்கு ராசி ரிஷபம்.

### முதற்கால் சிங்காதித்த பலன்

நீளியசெய்யுஞ்சால நிபுணனய்நஞ்சைசெய்யும்
மாளிகைமலையில்வாழு மன்னரால மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கண்ணியன்பன் வலக்கைகயின மருவுவேலான்
காளிசேர்வடிவுபேணுங் கதிரவன் காலினனே

### இதற்குக் காலசக்கரம்

மீன வியாழம் 10, மேஷசெவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16. மிதுன புதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கனனிபுதன 9 துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 ஆக வயது 10).

### இரண்டாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால் விருப்பமுண்டாம்
மாதுமாலுருவமாரு மணப்பொருக்கறிய வொண்ணன்
றூதுசேர்விழியார்தம்மேற் றன்பொருள்சாரநில்லான்
மாதுசேர்வலக்கைவேலன் மாலினங்கிசத்தினனே

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9. ரிஷபவெள்ளி 16, மேஷ செவ்வாய் 7 தனுசு வியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7, துலாம் வெள்ளி 16 ஆகவுயது 83.

### மூன்றாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகி நல்லன் சேரிஷ்டியானைப் பேணும்
ஒள்ளியகண்ணில்வல்லோ னெண்பொருள் சா நில்லான்
பள்ளியும்பலனும்கற்கும் பாக்கியமுடையோனாகும்
வெள்ளியங்கிசத்திலவந்த விருப்புள காலோ தானே

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9, சிங்காதித்தன் 5. கடக சந்திரன் 21 கன்னிபுதன் 9, துலாம் வெள்ளி 16. விருச்சிக செவ்வாய் 7 மீனவியாழம் 10, கும்ப சனி 4, மகர சனி 4 ஆகவயது 85

### நான்காங்கால் மேஷச் செவ்வாயின் பலன்

குறுகியசருவமெய்யன் குரோதசேர் சூதலோலாயமன
மறுகியமனத்தன்பெண்மேல் வன்பொருள் சா நில்லான்
முறுகியகொடுமைசெய்வன் முதுகிலேமறுவுண்டென்றும்
தெறிதருங்காதல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

### இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம் 10, விருச்சிகசெவ்வாய் 7, துலாம்வெள்ளி 16, கன்னிபுன் 9, சிங்காதித்தன 5, கடகசந்திரன் 21. மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16, மேஷச் செவ்வாய் 7 ஆகவயது 100.

### இனி மகாதிசை

செவவாய் 7, இராகு 18, குராசா 16, சனி 19, புதன் 7, கேது 7, சுக்ரன் 20, சூரியன் 6, சந்திரன் 10. ஆகவயது 110.

இவன் பிறந்த ஆண்டில் செவ்வாயின் திசையால் கண்டம் 3 ல் தண்ணீரால் 8 ல் சிலந்தியால் நாற்கால் மிருகத்தால் 12 ல் வெதுப்பால், 19 கருவியால் 21 வயிற்றுநோயால் 24 மாத்தால் 33 வயிற்றுஞ்சால் 37 உறன்முறையாரால் அம்மையால் கண்டம்.

இவை கடந்தால் ஆவணி மீ பூர்வபட்சம் ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை சித்திரை நட்சத்திரம் அஸ்தமித்து 5 நாளிகையில மரணம.

இவை கடந்தால் 85 வயது சென்று அமரபட்சம் ஞாயிற்றுக்கிழமை ஏகாதசி சித்திரை நட்சத்திரம் பிறந்தநாள் மரணம்.

இவை கடந்தால் 86 வயது சென்று வெள்ளிக்கிழமையும் உத்திர நட்சத்திரமும் அஸ்தமித்து 15 நாழிகையில் பித்தங்கதித்து மரணம்.

### இவனுக்கு

சூரியனுதயமாகில் உடல் வெளுத்திருக்கும்.
சந்திரனுதயமாகில் சீமானவான
செவ்வாயுதயமாகில் மிடியன்
புதனுதயமாகில் புத்திமான்
குருவுதயமாகில் குணவான்
வெள்ளிவுதயமாகில் வேளாண்மைசெய்வான்

சனிவுதயமாகில் தானியங்பட்டும்,
இராகுயுதயமாகில் வியாபாரம்
கேதுதயமாகில் கள்ளன்
இந்நாள் விவாகம்பண்ண, பெண்திரள், நன்று
திங்கள்கூடில் அமிர்தயோகம்
குருகூடில் மரணயோகம்

இந்நாளில் சுரந்தோன்றில் 10-நாளில் விடும். விடாதிருந்தால் கருங்காலி மரத்தடியில் நீர்க்கரையில் தேவதையை நோக்கி வேத மந்திரத்தால் பலியிடவும்

மிருகசீரிடத்தின் பலன் முற்றிற்று

---

# திருவாதிரை நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

---

கூ-கா-நங்-சா-திருவாதிரை

இதற்கு இராசி மிதுனம்

இதன் பலன்

பண்டிதன் பரியுமாள்வன் பலவுரையறிந்து சொல்வன்
கண்டவர்தம்மைப்பேணுங் கடுகிய சொல்லனும்
வண்டனுய்திரிந்துவாத வழக்கறிந்துரைக்க வல்லன்
கொண்டல்சேர்குழலினளே குணந்தரு மிதுனத்தானே

இந்நாளினுக்கு

தெய்வம்- உருத்திரன், யோனி - நாய், பட்சி- அன்றில், விருக்ஷம்- கருங்காலி, கணம்-மனிதன், நட்சத்திரம்-மீன்கண்போலிருக்கும், இது உச்சமானல் கன்னியில் ஒண்ணரை நாழிகைசெல்லும். 21-நாழிகைக்கு மேல் 4- நாழிகைவிஷம், தை மாதம் சூனியம்.

இந்நாளின் குணம் கிரந்தாந்தரங்களிலே சொல்லப்பட்டன

இந்னனுக்குக் கண் செவ்வரி படர்ந்திருக்கும், கடுநடையுடையவன், மூக்கு உயர்ந்திருக்கும், உறவுடையோன் மார்பு அகன்றிருக்கும், கோபமுடையோன், உறவினன், நித்திரைக்கடியன். ஸ்திரிகண்ணன், மறுத்துரைப்பான், இவனுக்கு நாற்கால் சீவவதை உண்டாம்.

திருவாதிரை முதற்கால் மீனகுரு

இதன் பலன்

மாந்தளிர்போலுமேனி மனதொத்துகலைகள்கற்கு
மேந்தியகுலத்திற்கெல்லா மிசைந்தோர்குருவுமாவன்

காய்ந்தபின்னடங்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செய்யபொற்காலினுனே

இதற்குக் காலசக்கரம்

மீனகுரு 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுர்குரு 10 விருச்சிக குஜன் 7 துலாசுக்கிரன் 16 கன்னியாபுதன் 9 சிம்மாதித்தன் 5 கடக சந்திரன் 21 ஆக வயது 86.

இரண்டாங்கால் கும்பசனி

இதன் பலன்

ஊனமதுடையனுகு முறவொடுபழியுநேரான்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லன்
மானமதுடையோனுகு மனம்பொறுக்கறியான்மேலும்
கானகந்திரிந்துவாழுங் காரியங்கிசத்தினுனே

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 10 ரிஷப சுக்கிரன் 19 மேஷகுஜன் 7 தனுர்குரு 10 மகரசனி 4 மீனகுரு 10 மேஷகுஜன் 7 ரிஷபசுக்கிரன் 16 ஆக வயது 83.

மூன்றுங்கால் மகரசனி

இதன் பலன்

ஆரையுமறிந்துபேசு மரும்பொருளறிவனுகுஞ்
சீரியசெய்யவேண்டான் சிதைவதைசெய்வதல்லான்
மாரியிற்பொய்யேபேசு மனம்பொறுக்கரியான்மேலும்
காரியக்கிலேசனுகும் கரியனங்கிசத்தினுனே

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்.9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9, துலாசுக்கிரன்-16. விருச்சிகசனி-7. மீனகுரு-10. கும்பசனி-4, மகரசனி-4, ஆகவயது-85.

நாலாங்கால் தனுர்குரு

இதன் பலன்

சிறிதேயுண்ணும்பொய்சொல்லான் சிவந்தகண்ணன் சிறுகிழவ
னறிவுமிகவாகூபெருங்தணந்தா னடைந்தோர்க்கன்பனழகியனும்
பொறிசேர்மஞ்ஞையனையாளைப்பொருளென்றெண்ணுன் புகழ்விளங்
வெறிசேர்கூந்தன்மடலானே வியாழக்காலிற்பிறந்தானே [கும்

இதற்குக் காலசக்கரம்

தனுர்குரு 10 விருச்சிக குஜன் 7 துலாசுக்கிரன் 16 கன்னியா புதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபசுக்கிரன் 16 மேஷகுஜன் 7 ஆகவயது 100

### இனி மகாதிசை

இராகு 18 குரு 16 சனி 19 புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 6 சந்திரன் 10 குஜன் 7 ஆகவபது 120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

இராகுதிசையிற் கண்டம் அன்றியும் 3 ல் வெதுப்பால் 7 ல் வைசூரியால் 12ல் நாற்கரல் மிருகத்தால் 16ல் விஷத்தால் 18 ல் உயரவேறி வீழ்வதால 20ல் பெண்ணால் 26 ல் மருந்திட்டால் 30ல் கள்வரால் 35ல் இராஜபடையால் 40ல சுழல்வாதத்தால் 47ல் வயிற்றுவியாதியால் 50ல் மூலவியாதியால் 55 ல் வயிற்றுக்கடுப்பால் 60 ல் வயிற்றுப்பேதியால் கண்டம்.

இவை கடந்தால் 85 வயதுசென்று ஆனி மீ பூர்வபட்சம் அஷ்டமியும் ஞாயிற்றுக்கிழமையுங் கூடிய அன்று சுவாதி உதித்து 3 நாழிகையில் இளைப்புத் தோன்றில் மரணமாம்.

இதுகடந்தால் 86 வயது சென்று தை மீ பூர்வபட்சம் நவமியும் குருவாரமுங் கூடிய அன்று திருவாதிரை உதித்து 1 நாழிகையில் இளைப்புதோன்றி மரணமாம்.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் மிடியன் திருடன்
சந்திரன் உதயமாகில் பயிர் பலிதம்
குஜன் உதயமாகில் கோபியாவான்
புதன் உதயமாகில் பண்டிதன், பிதாவுக்கு நல்லவன்
குரு உதயமாகில் வியாபாரி, கல்வியுடையவன்.
சுக்கிரன் உதயமாகில் கள்ளன் வியாபாரி
இராகு உதயமாகில் கலகப்பிரியன்
கேது உதயமாகில், விரோதி, விஷபுத்தியுடையவன்
இந்நாழில் குஜன் கூடில் மிருத்தியோகம்
குரு கூடில் சுபயோகம்

மேற்படி யோகங்களில் பூஜாரம்பம் வித்தியாரம்பம இவை செய்யலாகாது.

பெண்திரளில் நோய்
மானம் பிறக்கில் அசந்தாமும்
சுரந்தோன்றில் ஐந்துநாழிகையில் விடும்

விடாதிருந்தால் தேனும் நெய்யும் கலந்து அரசமரத்தடியில் தேவதையை நோக்கிப் பலியிட்டு ஓமம்பண்ணவும்.

இந்நாளில் வானத்தில் வில்லிடினும் வெள்ளைமேகம் பரவினும் மழைபெய்யும் கண்டராஜஜா.

### திருவாதிரையின் பலன் முற்றிற்று.

---

# புனர்பூச நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

கே-கோ-ஹ-ஹி-புனர்பூசம்
இந்நாளின் பலன்

நெய்யோடுபாலுங்கூடு நிரம்பியகுணத்தனுகும்
வெய்யசொல்லுடையனுகும் வேதியர்தம்மைப்பேணுங்
கைமதுநெடியனுகுங் கடுநடையுடையனுகும்
பொய்யுரைமொனறுஞ்சொல்லான் புனர்பூசநாளினுனே.

இந்த நட்சத்திரம் 6-மீன் ஓடம்போலிருக்கும்

இந்நாளினுக்கு தெய்வம்-அக்கினி, யோனி-பெண்பூனை, பட்சி-அன்னம், விருட்சம்-புன்னைமரம், கணம்-தெய்வம், புதன்கிழமை-ஜென்மவாரம், பொருத்தம்-7 கிழக்குவாசல்-விடுவது, நாள்-ஆண், பூதம்-அப்பு, ஜாதி-பிராமணன், யோகினி-மயேஸ்பரி.

இந்நாளினுக்கு 30-நாழிகைக்கு மேல் 4-நாழிகை விஷம்

இந்நாள் ஜெபதபஞ்செய்ய, திருவெழுத்திட, நமஸ்காரஞ்செய்ய, அபிஷேகம்பண்ண, யானைகுதிரையேற, பொன்பூண, கோடியுடுக்க, உபநயனஞ்செய்ய, பூஞ்சோலை வைக்க, மருந்துதின்ன, வியாபாரஞ் செய்ய, குடிபோக நன்று.

இந்நாளில் பிறந்தவன் புத்தியுடையவன், காலுங் கையும் உறந்திருக்கும், கல்வியுடையவன், நெற்றி உயர்ந்திருக்கும், அடக்கமுடையவன், ஸ்திரீகட்குப் பிரியன, அழகுடையவன், வார்த்தையில் வல்லவன், மெதுவான நடையுடையவன், பத்திவிசாரணையுடையவன், பொய் பொருன், பொருளுரைபபான், கைகள் கமலம்போலிருக்கும்.

இந்நாளிற் பிறந்தவனுக்கு முதல்கால் மேஷச்செவ்வாய்

இதன்பலன்

குறுகியவுருவமெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன்பெண்மேல் வன்பொருள்சாரநில்லான்
முருகியகொடுமைசெய்வன் முதுகிலேசுழியுமுண்டாஞ்
செரிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினுனே.

இதற்கு காலசக்கரம்

மேஷச்செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, மிதுனபுதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னியாபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, தனுசுவியாழம்-10, ஆகவமது-100.

இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியமதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணு
மெள்ளியகண்ணுல்வெள்ளா னென்பொருள்களவனுகும்

பள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனாகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளை தானே.

இதற்குக் காலசக்ரம்.

மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம் வெள்ளி-16, கன்னி புதன்-9, கடகசந்திரன்-21, சிங்காதித்தன்-5, மிதுனபுதன்-9, ஆக வயது-85.

மூன்றாங்கால் மிதுனபுதன் பலன்

மேலைத்தாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாதுநாமாகி மனம்பொறுக்கரியவெண்ணான்
றுதுசேர்முழவினார்பாற் றன்பொருள்சாரநில்லான்
மீதுரையுமைக்கவல்லன் மிதுனவங்கிசத்தினானே.

இதற்கு காலசக்கரம்

ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசு வியாழம்-10, மேஷச்செவ்வாய்-7, ரிஷபசந்திரன்-16, மிதுனபுதன்-9, ஆக வயது-83.

நாலாங்கால் கடகசந்திரபலன்

தலையதுதடியனாகுந் தன்மனம பெரியனாகு
மலைதரும்வல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்றிகற்கும் கடிமதக்காளையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினானே.

இதற்குக் காலசக்கரம்

கடக்சந்திரன்-21, சிங்காதித்தன்-5, கன்னிபுதன்-9, துலாம் வெள்ளி-16, விருச்சிக செவ்வாய்-7, தனுசுவியாழம்-10, மகரசனி-4, கும்பசனி-4, மீனவியாழம்-10, ஆக வயது-86.

இனி மகாதிசை

இராஜா-16, சனி 19, புதன் 17, கேது-7, சுக்கிரன்-20, சூரியன் 6, சந்திரன்-10, செவ்வாய்-7, இராகு-18, ஆகவயது-120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் வலிப்பால், 5-ல் வயிற்று வியாதியால், 9-ல் ஆயுதத்தால், 11-ல் விஷத்தால், 15-ல் சத்துருவால், 25-ல் வைசூரியால், 30-ல் அரையாப்பால், 36-ல் வாதத்தால், 40-ல் இராஜாவால், 55-ல் அக்கினி மகோதரத்தால், 68-ல் சிலேத்துமத்தால் கண்டம்.

இவை கடந்தால், 80-வயது சென்று வைகாசிமாதம் அமரபக்ஷம் பஞ்சமி வெள்ளிக்கிழமை புனர்பூசம் உதித்து 5-நாழிகையில் விக்கல் கண்டு மரணம்.

இவை கடந்தால் 85-வயது சென்று கார்த்திகை மீ அமரபக்ஷம் ஞாயிற்றுக்கிழமை அஸ்தம் உதித்து 20-நாழிகைக்குள் மரணம்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமானல் கோளனும் மிடியனுமாவான்
சந்திரன் உதயமானல் குணவானும் தனவானுமாவான்

செவ்வாய் உதயமாகில் கோபியும் பண்டிதனுமாவான்
புதன் உதயமாகில் வித்தையுடையவன்
குரு உதயமாகில் புத்திர ருள்ளவன்
வெள்ளி உதயமாகில் ஒற்றைக்கண்ணன்
சனி உதயமாகில் கள்ளன்
இராகு உதயமாகில் கோள்சொளாதவன்
கேது உதயமாகில் திருடன், பாடவல்லன்
இந்நாளில் மாதம் பிறக்கில் அகந்தாழும்
பெண் இராவில் நன்மை

இந்நாளில் சுரம்தோன்றில் 20-நாளில் விடும்; விடாதிருந்தால் நெய்யும் பாலும் கலந்து தேவதையை நோக்கி ஓமம் பண்ணவும்.

இந்நாளில் வழி போகவேண்டில் பச்சரிசியும் பாலும் தின்று போவது நன்று நாபிரஜ்ஜு.

புனர்பூச நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று.

---

# பூச நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

ஹூ-ஹே-ஹோ-டா-பூசம்

இந்நாளின் பலன்

தேசமேபுகழவாழுஞ் சிட்டரையறிந்துகூடும்
வாசமாமனையுமுண்டாம் மதியுடன் கல்விசேரும்
வாசமார்குழலிமாரை மனதுடன்சேர்ந்துவாழும்
போசனமினிமையாவான் பூசநாட்டோன்றினேனே.

பூசம்முதற்கால் கடகசந்திரன

இதன் பலன்

சொல்லுநற்சொல்லுஞ்சொல்லுந் துக்கமுமெழுகிப்பார்க்கும்
வெல்லுவன்பகைவாகம்மை விரும்பியேகருமஞ்செய்ய
நல்லனுய்மெள்ளவாழு நன்னுதலானைப்பேணு
மல்லியல்கோதைமாதே யலவனும்ராசியாமே.

இந்த நட்சத்திரம புடலம்பூப்போலிருக்கும்

இந்நாளினுக்கு யோனி-ஆட்டுக்கிடா, பட்சி-நீர்க்காக்கை, விருட்சம்-அரசு, கணம்-தெய்வம், திங்கள்-சென்மவாரம், பொருத்தம்-6 கிழக்குவாசல் விடுவது, நாள்-ஆண், தெய்வம்-ஆதித்தன், பூதம்-பிருதுவி, ஜாதி-அகஸ்தியன், யோகினி-மாதங்கி.

இந்நாளிற்கு 20-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்

இந்நாளிற்பிறந்தவன் சவுந்தரியன் பேராளன் மாதாவுக்குநல்லவன் ஒழுக்கமுடையவன் வழக்கறிந்துரைப்பன் கோபிகாலும் கையும்

மெல்லிதாயிருக்கும், கருத்துடையவன் அரையிலும் முகத்திலும் மரு வுண்டு தனமுடையவன் நெடியன்.

இந்நாளில் வித்யாரம்பஞ்செய்ய, குடிபோக காதுகுத்த விரை தெளிக்க அகம்புதுக்க கோடியுடுக்க ஆபரணம்பூண பெண்கொள்ள நன்று; பெண்திரளில் பிள்ளையுண்டாம்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரம் தோன்றில் 4 நாழிகையில் விழும்; விடாதிருந்தால் தெய்வமந்திரத்தால் ஓமஞ் செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் சோறு கந்தபுஷ்பம் பலியிடவும்.

இந்நாளில் பிறதேசம்போக நேரிட்டால் நெய்குடித்துப் போகவும்.

### முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால நிபுணனுயபழியச்செப்ய
மாளிகைமனையில்வாழ்வன் மன்னரான்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்கன்னியன்பன் வலன்கையின்மருவுவேலான்
காளிபேர்வடிவுபேணுங் கதிரவன்காலினனே.

### இதற்குக் காலசக்கரம்

விருச்சிக செவ்வாய் 7, துலாம் வெள்ளி 16 கன்னிபுதன் 9 கடக சந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி16 மேஷச் செவ்வாய் 7 மீனம் வியாழம் 10 ஆக வயது 100.

### இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராலருளுமுண்டாம்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுந்தோற்று
மந்திரம்பொய்யுஞ்சொல்லு மறைப்பொருணெருங்கிவாழும்
புந்தியிற்பெரியோனுரும் புகனினங்கிசத்தினனே.

### இதற்குக் காலசக்கரம்

கும்பசனி 4 மகரசனி 4 தனுசு வியாழம 10 மேஷச் செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 ஆக வயது 85.

### மூன்றாங்கால் துலாம் வெள்ளி பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமருவுண்டென்றுஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சேய்தருங்கொடுங்கண்ணுள
ஞதரவுடையனுரு மறிவுடனன்றிகற்குஞ்
சார்வதுமாதர்தம்மால் தருபுகர்காலினனே.

### இதற்குக் காலசக்கரம்

துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 கன்னிபுதன் 9 ஆக வயது 83.

### நாலாங்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன்னுடையனுகும்
பட்டையமணிந்ததோளான் படைக்கெலாந்தலைவனுகுஞ்

சிட்டரைச்சேர்ந்தவாழுஞ் சிறுகுரியாளனுகும்
வெட்டெனவொன்றுமஞ்சா னெறியினங்கிசத்தோனே.

இதற்குக் காலசக்கரம்

கடக சந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷ செவ்வாய் 7 மீன வியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசு வியாழம் 10 ஆக வயது 86.

இனி மகாதிசை

சனி 19 புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ரசா 16 ஆக வயது 120

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3-ல் கருவியால் 5 ல் விஷத்தால் 7 ல் வைசூரியால் 12 ல் கிரந்தியால் 16 ல் சுரத்தால் 25 ல் சத்துருவால் 36 ல் கள்ளரால் 46 ல் வாதத்தால் 56 ல் நெருப்பால் 65 ல் அரசர்படையால்.

இவை கடந்தால் 85 வயது சென்று ஐப்பசி மாதம் பூர்வபட்சம் திங்கட்கிழமை ஏகாதசி சதய நட்சத்திரம் உதித்து நாலு நாழிகையில் வயிற்று நோயால் மரணம்.

இவை கடந்தால் கார்த்திகை மாதம் வியாழக்கிழமை பூர்வபட்சம் சதுர்த்தசி அனுஷநாள் உதித்து 20 நாழிகைக்கு மேல் பெருவயிற்றால் மரணம். இந்த நட்சத்திரம் உச்சமாகில்துலாத்தில் 2½நாழிகை செல்லும்.

இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சிவந்தமேனியுடையவன்.
சந்திரன் உதயமாகில் தனவான்.
செவ்வாய் உதயமாகில் பண்டிதன், முட்டிக்காலன்
புதன் உதயமாகில் வித்வானுவான்,
வியாழம் உதயமாகில் மந்திரியாவான்.
வெள்ளி உதயமாகில் வாகன முடையவன்.
சனி உதயமாகில் கலகன்.
ராகு உதயமாகில் கைவாசிக்காரன்.
கேது உதயமாகில் செத்துப்போம், விஷக்காரனுவான்,

சங்கராஜ்ஜ

பூசத்தின் பலன் முற்றிற்று

# ஆயிலிய நட்சத்திரத்தின்

## அதிதேவதை முதலியவைகள்

---

டீ-டு-டே-டோ ஆயிலியம்

இந்நாளின் பலன்

கடுகியேநடக்கவல்லன் காரியமனத்தனுகுஞ்
சடுதியிலடுத்துப்பேசுந் தந்தைதாய்தமரைப்பேணும்

வடுகரைபேசவல்லன் வருந்திடுயபிருந்துவாழு
மடுத்தவர்க்கன்பனுகு மாயில்யநாளினுனே.

இந்த நட்சத்திரம் 4 மீன் அம்மிபோலே இருக்கும்.
இது உச்சமாகில் துலாத்தில் 4 நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-கடுவன் பூனை, பட்சி-விச்சுளி விருட்சம்-புன்னைமரம் கணம் ராக்ஷதன் பொருத்தம்-6 வடக்கு கிழக்கு வாசல் விடுவது தெய்வம்-வாயு சாதி-வைணவன் கோத்திரம்-வைசியன் பூதம்-அபபு.

இந்நாளிற்கு 32 நாளிகைக்கு மேல் 4 நாழிகை விஷம் சித்திரை மாசம் சூனியம்.

இந்நாளில்கரும்பு வைக்க வெற்றிலைநட உத்தமம். பெண்திரளில் விதவையாவாள். மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றில் எட்டு நாழிகையில்விடும்விடாதிருந்தா நெல் வரகு ஆலங்கொழுந்து நெய்யுங் கலந்து ஓமஞ் செய்து அடுத்த விருட்சத்தடியில் பெலியிடவும்.

ஆயிலியம் முதற்கால் தனுசு வியாழத்தின் பலன்

சிரிதோன்றும்பொய்கள்சொல்லான் சிவந்தகண்ணன்சிறுகுழலா
னறிவுமிகவேபெருங்குணத்தா னடைந்தோர்க்கன்பனழகியனும்
பொருள்சேர்மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணுன் புகழ்
விளிசேர்கூந்தன்மடமாதே வில்லின்காலிற்பிறந்தானே. விளங்கும்

இதற்குக் காலசக்கரம்

மேஷச் செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னியாபுதன் 9 துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசு வியாழம் 10 ஆக வயது 100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஆரையுமறிந்துபேசு மரும்பொருளம்பன்செட்டு
சீரியேசெய்யவேண்டாஞ் சிந்தையில்செய்வதெல்லா
மாரியேபொய்கள்சொல்லான் மனம் பொறுக்கரியவொண்
காரியகிலேசனுகுங் காரியங்கிசத்தினுனே. [ணன்

இதற்குக் காலசக்கரம்

மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 கன்னி புதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுன புதன் 9 ஆக வயது 85.

மூன்றுங்கால் கும்பசனியின் பலன்

ஊனமதுடையனுகு முறவொடுபழியுமேறுன்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லை
வீனமேயொன்றுஞ்சாரா னிடரதுபுரியவல்லன்
கானகந்திரிந்துவாழுங் கரியினங்கிசத்தினுனே.

### இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி 16 மேஷ செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசு வியாழம 10 மேஷச் செவ்வாய் 7 ரிஷப வெள்ளி 16 மிதுனபுதன் 9 ஆக வயது 83.

### நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மதிமுகமறுவுண்டென்று
மேந்தியேகுலத்துக்கெல்லா மிசைந்தொருகுருவுமாவான்
காய்ந்தபினடக்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன் பனுகுஞ் செய்யபொற்காலினனே.

### அதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிம்மாதித்தன் 5 கன்னியாபுதன் 9 துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 3 மீனவியாழம் 10 ஆக வயது 86.

### இனி மகாதிசை

புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 6சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ராஜா 16 சனி 19 ஆக வயது 120.

இந்நாளில் பிறந்தவனுக்கு புருவம் நெருங்கி உயர்ந்திருக்கும் சுகந்தன், தெய்வபக்தியுடையவன். கோபி, வீண்சொல் பொருன் பெருமை இல்லான் உருக்கமுடையவன், வலுமையாய்ப் பேசுவன். அடவியடைந்து வாழ்வன், பகையாளியுடனே எதிரான், எல்லாருக்கும் கொடுக்கவேண்டியிருப்பான்.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

2—ல் சுரத்தால் 5 ல் வியாதியால் 8 ல் மிருகத்தால் 14 வைசூரியால் 19 ல் நீரால் 25 ல் பெண்களால் 35 ல் விஷத்தால் 41 ல் ஆயுதத்தால் 45 ல் மிருகத்தால் 55 ல் சுழல் வாதத்தால் 57 ல் உதிர வியாதியால் 64 ல் நீர்படீடால் 68 ல் வாதத்தால் 79 ல் அக்கினியால்.

இவை கடந்தால் 81 வயது சென்று ஐப்பசி மாதம் ஞாயிற்றுக்கிழமை பூர்வபட்சம் ஏகாதசி ஏழு நாளிகையில் பித்தங்கதித்து அஸ்தமித்து 3 நாளிகைக்கு மேல் மரணம்

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் குணக்கேடன், மிடியன்
சந்திரன் உதயமாகில் தனவான்
செவ்வாய் உதயமாகில் கோபி
புதன் உதயமாகில் விசாரமுடையவன், வித்துவான்
வியாழம் உதயமாகில் தனவான்
வெள்ளி உதயமாகில் துஷ்டன்
சனி உதயமாகில் கலகன்
இராகு உதயமாகில் கெடுதியுள்ளவன்
கேது உதயமாகில் முடவன் குருடன்

பாதரஜ்ஜு

ஆயிலிய நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

# மக நட்சத்திரத்தின்

## அதிதேவதை முதலியவைகள்

மா-மி.மு.மே-மகம்

### இந்நாளின் பலன்

தந்தை தாய்மிகவும்பேணுஞ் சார்பொடு புவியுட்சேருஞ்
சிந்தை நூல்மிகவுங்கற்குந் தேசம்போய்த் திரியவல்லன்
மந்தனையுகந்துவாழு மணமதுமுடிக்கவல்லன்
மந்திரப்பொய்கள்சொல்லான் மகத்திலுதோன்றினானே

### இந்நாள்கொண்ட சிங்க பலன்

நிலைபெறத்திரிந்துவாழு நிம்பிடுங்கல்விகற்கும்
வலியுளமனத்தனாகும் வஞ்சகமொன்றுஞ் சொல்லான்
பலதனியுடையனாகும் பழிதனக்கஞ்சிவாழுஞ்
சிலையதுவல்லனாகுஞ் சிறப்புளசிங்கந்தானே

இந்த நட்சத்திரம் 4 மீன் முடங்கால்போலிருக்கும்.

இது உச்சமாகில் விருச்சிகத்தில் $1\frac{1}{4}$ நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-ஆணெலி பட்சி-கழுகு விருட்சம்-ஆலம் கணம்-ராக்ஷதன் ஞாயிற்றுக்கிழமை-ஜென்மவாரம் பொருத்தம்-11 கிழக்கு தெற்கு-வாசல் விடுவது நாள்-ஆண் தெய்வம்-சுப்பிரமணியர் பூதம்-அப்பு ஜாதி-சூரியன் யோகினி-கௌமாரி.

இந்நாளில் சுரந்தோன்றில் 10 அல்லது 15 நாழிகையில் விடும். விடாதிருந்தால் 21 நாழிகையில் மரணம்.

இந்நாளினுக்கு 30 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம் ஆவணி மாதம் சூனியம்.

இந்நாளிற் பிறந்தவன் அழகுடையவன் தனமுடையவன் நீதியுடையவன் ஸ்திரீகண்ணன் புளித்த பதார்த்தப்பிரியன் வலதுபக்கம் மறுவுண்டு. பூசைமுடிக்க வல்லவன், பெண்பிள்ளை மிகவுண்டு, பிறர் காரியத்தைப் பார்க்க அறிவுடையவன், இவனுக்குக் கீழ்வாய் வயிறு பெருத்திருக்கும், சத்தியவாக்கியன்.

### முதற்கால் மேஷச் செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெருளிமுன்னுடையனாகுஞ்
சிட்டராத்தெரிந்துவாழுஞ் சிறுகுறியாளனாகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கெலாந்தலைவனாகு
மெட்டெனவெடுத்துப்பேசு மெரியினங்கிசத்திலுனே

### இதற்குக் காலசக்கரம்

தனுசு வியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடக சந்திரன் 21 ஆகவயது 86.

### இரண்டாங்கால் துலாம் வெள்ளியின் பலன்

மார்பகன் றுயர்ந்தமெய்யன மதிமுகமறுவுண்டென் றுஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சிறுகுறியாளனுகு
மாரையுமறிந்துகூறு மறிவொடுநன் றிகற்குஞ்
சார்வதுமாதர்தம்பாற் றரும்புகர்க்காலினுனே 1

### இதற்குக் காலசக்கரம்

துலாம் வெள்ளி 16 விருச்சிகசெவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 மேஷச்செவ்வாய்7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 16 ஆகவயது 89.

### மூன்றுங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதர்களறுளுமண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலேதிசையுந்தோற்று
மந்திரப்பொய்கள்சொல்லான் வரும்பொருளெருங்கிவாழும்
புத்தியிற்பெரியோனுகும் புதனினங்கிசத்தினுனே

### இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 ஆக வயது 85.

### நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலைமைதுகடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
பலகலைநன்றிகற்கும் பாக்கியமுடையனுகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினுனே

### இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம் 10 விருச்சிகசெவ்வாய் 7 துலாம்வெள்ளி 16 கன்னிபுதன 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 ஆக வயது 100.

### இனி மகாதிசை

கேது 7 வெள்ளி 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ராஜா 16 சனி 19 புதன் 17 ஆகவயது 120

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3—ஜலத்தால் 5—விஷத்தால் 7—வைசூரியால் 9—மிருகத்தால் 15—விஷத்தால் 20—அரையாப்பால் 24—வயிற்று வியாதியால் 40—மிருகத்தால் 47—நல்லபாமபால் 50—கள்ளரால் 53—நெருப்பால் 80—வயிற்றுநோயால் கணடம்.

இவை கடந்தால் 90 வயதுசென்று ஆவணிமாதம் செவ்வாய்க்கிழமை அமரபட்சம் நவமி சோதிநாளுதித்து 2 நாழிகையில் சகல விசாரியாய் மரணம்.

இவை கடந்தால் 90 வயது சென்று பங்குனி மாதம் ஞாயிற்றுக் கிழமை துவாதசியுதித்து வயிற்றுவலியால் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் கள்ளன்
சந்திரன் உதயமாகில் நன்மையுடையவன்
செவ்வாய் உதயமாகில் தேசாந்திரியாவான்
புதன் உதயமாகில் வித்தையுடையவன்
வியாழ உதயமாகில வேளாண்மை பலிக்கும்
வெள்ளி உதயமாகில் வியாபாரி
சனி உதயமாகில் யோகியாவான்
இராகு உதயமாகில் உளைச்சலுடையவன்
கேது உதயமாகில் விஷக்காரி துஷ்டன்

இந்நாளில் போஜனம் செய்ய மாடுகொள்ள விரைதெளிக்க நெற் போர்கட்ட சாந்திபண்ண அகமெடுக்க கடன்கொடுக்க ஆகாது.

பெண்திரளில் மாதம் பிறக்குமுன்னே மரணம். மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்த நட்சத்திரத்தில் ஊர்ப்பிரயாணம் போகவேண்டில் மான் இறைச்சி தின்று போகவும்.

பாதரஜ்ஜு

மகநட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

---

# பூரநட்சத்திரத்தின்

## அதிதேவதை முதலியவைகள்

மோ-டா-டீ-டு-பூரம்

இந்நாளின் பலன்

**வருந்தியேதேடவல்லன் வாணிபம்பலவுஞ்செய்யும்**
**விரும்பியேபலவுஞ்செய்யும் வெட்டெனப்பேசவல்லான்**
**சுரும்புசூழ்குழலினாரைச் சூழ்ச்சியாய்வெல்லவல்லன்**
**பொருந்தியேயுரைக்கவல்லன பூரநாட்டோன்றினானே**

இந்த நட்சத்திரம் கட்டிற்காற்போலிருக்கும்
இது உச்சமானால் விருச்சிகத்தில் 4 நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு யோனி-பெண்ணெலி பட்சி-பெண்கழுகு விருட் சம்-பலாசு கணம்-மனிதன் ஞாயிற்றுக்கிழமை-சென்மவாரம் பொருத் தம் 10, கிழக்கு தெற்குவாசலில் விடுவது நாள்-பெண் தெய்வம்-விஷ்ணு பூதம்-அப்பு சாதி- அனுலோமன் கோத்திரம்-அகஸ்தியன் யோனி-வராகி.

இந்நாளினுக்கு 33 நாளிகைக்கு மேல் 4 நாழிகை விஜம். ஆவணி மாதம் சூனியம்.

இந்நாளிற் பிறந்தவன் அழகியன். கண் செவ்வரியோடிருக்கும். கல்வியுடையவன். விசனமுடையவன், நெடியன் கோபித்தவுடனே ஆறுவன், பலபேர் சொன்ன காரியத்தைச் செய்வன்.

### பூரம் முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால நிபுணனுப்கல்விகற்கும்
மாளிகைமனையில்வாழு மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வாளிசேர்க்கண்ணினன்பன் வலதுகைமருவில்வேளான்
காளிசேர்வடிவுபேணுங் கதிரவன்காலினுலே

### இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுன புதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கன்னிபுதன் 9 துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 ஆகவயது 100.

### இரண்டாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையரங்கசாலன் வேந்தரால் விருப்பமுண்டாம்
மாதுமாதுருவமாகு மனம்பொறுக்கரியபெண்ணுன்
ரூதுசேர்குழலிதன்மேற் றன்பொருள்சாரநில்லான்
மாதுரைவலக்கைவேலான் மாலினங்கிசத்தினுலே

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷச்செல்வாய் 7 ரிஷபவெள்ளி 16 ஆகவயது 83.

### மூன்றாங்கால் வெள்ளி பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழையாரைப்பேணு
மொள்ளியகண்ணியன்பன் னொன்பொருள்சாரநில்லான்
பள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாலைதானே

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 ஆகவயது 85

### நாலாங்கால் விருச்சிகசெவ்வாயின் பலன்

குறுகியகுறளன்மெய்யன் குறலைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன் பெண்மேல் மனமதுசாரநில்லான்
முருகியகொடுமைசெய்யு முதுகினிற்சுழியுமுண்டாம்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினுனே

## இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம் 10 விருச்சிகசெவ்வாய் 7 துலாம்வெள்ளி 16 கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன 21 மிதுனபுதன 9 ரிஷப வெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 ஆகவயது 100.

## இனி மகாதிசை

வெள்ளி 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய்7 ராகு 8 ராஜா 16 சனி 19 புதன் 17 கேது 7 ஆகவயது 120.

## இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

2—ஆயுதத்தால் 5—விஷத்தால் 7—வைசூரியால் 8—பேதியால் 14—உதரவியாதியால் 15—புலியால் 18—நெருப்பால் 25—அரையாப்பால் 35—கண்ணோயால் 37 ராசாவால் 47—வஞ்சனையால 57—முழங்கால் வாதத்தால் 65—சுரத்தால் கண்டம்

இவை கடந்தால் 80 வயது சென்று ஆவணிமாதம் வெள்ளிக்கிழமை அமரபட்சம் அஷ்டமி திதி பூசநாளுதித்து ஒருநாழிகையில் சிலேத்துமத்தால் மரணம்

இவை கடந்தால் 80 வயதுசென்று ஆடிவாதம் ஞாயிற்றுக்கிழமை பூர்வபட்சம் பிரதமை நாளுதித்து 2 நாழிகையில் இளைப்புத் தோன்றி மரணம்.

## இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் ராசபுருஷன் வேளாண்மை செய்வன்.
சந்திரன உதயமாகில தேசாந்திரி.
புதன் உதயமாகில் புத்தியுடையவன்.
வியாழம் உதயமாகில் வியாபாரி.
வெள்ளி உதயமாகில் யாவர்க்கும் நல்லவன்.
சனி உதயமாகில் விசுவாசன், மிடியன்.
ராகு உதயமாகில் கலகன்.
கேது உதயமாகில் கன்னக்காரன்.
இந்நாளில் புதன் கூடில் அமிர்தயோகம்.
பெண்திரளில் மலடி.
மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோன்றில் 20 நாளிகையில் விடும், விடாதிருந்தால் நெய் பால் பொரி அவல் இவைகளைப் பெலியிட்டு வேதமந்திரத்தால் ஓமஞ் செய்து அடுத்த விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் தேவதையை நோக்கிப் பெலியிடவும்:

இந்நாளில் வானத்தில் வில்லிட்டால் 8 நாழிகையில் மழைபெய்யும்.
இந்நாளிற் பிறந்தவன் செந்நெல் தின்று ஊர்வழிபோகவும்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் விருச்சிகத்தின் மூணரைநாழிகை செல்லும் சங்கராஜ்ஜா.

பூரநட்சத்திரத்தின் பதன் முற்றிற்று.

# உத்திரநட்சத்திரத்தின்

## அதிதேவதை முதலியவைகள்

டே-டோ-பா-பீ-உத்திரம்

### இந்நாளின் பலன்

அழகியநடையனுகு மாயிழைதன்னைப்பேணும்
பழிபதுபார்த்துவாழும் பாவங்கள்செய்யமாட்டா
னுழவரைசேர்ந்துவாழு முத்தமர்தம்மைகாக்கு
மொழிபெறுமேனியாகு முத்திரநாளினோனே.

### உத்திர முதற்கால் கன்னியின் பலன்

சாலவேநல்லனாகுந் தந்தைதாய்தம்மைப்பேணும்
பாலனுங்காலநதன்னிற் பரிந்துபோய்வந்துநிற்குஞ்
சீலமுமறிந்துவாழுஞ் சிறப்புடனினிதுபேசுங்
காலிலேமறுவுண்டென்றுங் கன்னியின் ராசிதானே.

### இந்த நட்சத்திரம் கட்டிற்கால்போலிருக்கும்

இந்நாளனுக்கு யோனி—எருது, பட்சி—மரங்குத்தி, விருட்சம்—அத்தி, கணம்-மனுஷன், தெய்வம்- ஆதித்தன், பூதம்-அக்கினி, ஜாதி-பிரதிலோமன், கோத்திரம்-அகஸ்தியன், யோகினி-கௌமாரி, ஜாதி-வைணவன், ஞாயிற்றுக்கிழமை-சென்மவாரம், பொருத்தம், 10 கிழக்கு தெற்கு வாசல் விடுவது.

ஆனிமாசம் சூனியம்.

இந்நாளினுக்கு 18-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷம்.

### முதற்கால் தனுசுவியாழன் பலன்

மாந்தளிர்போலுமேனி மனமொத்துகல்விகற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைந்ததாராசனுகுங்
காந்தபீடைக்குமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கன்பனுகுஞ் செய்யபொற்காலினோனே.

### இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, தனுசுவியாழம் 10, விருச்சிகசெவ்வாய்-7, துலாமவெள்ளி-16, கன்னிபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, ஆக வயது-86.

### இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஊனமதுடையனுகு முறவொடுபகையுமெண்ணுன்
மானமதுடையனுகு மனம்பொறுக்கரியமாட்டான்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் கடைசனிகாலினோனே.

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, தனுசு வியாழம்-10, மகரசனி-4. கும்பசனி-4, மீனவியாழம்-10, மேஷச் செவ்வாய்-7, ரிஷபவெள்ளி-16, ஆக வயது-83.

### மூன்றாங்கால் கும்பசனியின் பலன்

ஆரையுந்தடுத்துப்பேசு மறுவதுஒன்றுமில்லான்
சீரிய செய்யவேண்டான் சிதைவதைசெய்வதல்லான்
மாரியும்பொய்கள் சொல்லுமன பொறுக்கரிய வொண்ணு
காரியங்கிசத்தில்வந்த கருத்துள்களை தானே.

### இதற்கு காலசக்கரம்

மிதுனபுதன்-9, சிங்காதித்தன்-5, கடகசந்திரன்-21, கன்னி புதன்-9. துலாம்வெள்ளி-16, விருச்சிகசெவ்வாய்-7, மீனவியாழம்-10, கும்பசனி-4, மகரசனி-4, ஆக வயது-85

### நாலாங்கால் மீனவியாழன் பலன்

சிறிதேயொன்றும்பொய்சொல்லான் சிவந்தகண்ணன்சிறுகுழலா
னறிவுமிகவேபெருங்குணத்தா னடைந்தோர்க்கன்பனழகியனும்
பொருள்சேர்மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணும் விளங்
விரிசேர்கூந்தன்மடமாதே வியாழக்காலிற்பிறந்தானே. [கும்

### இதற்கு காலசக்கரம்

தனுசு வியாழம்-10, விருச்சிகசெவ்வாய்-7, துலாம்வெள்ளி-16-கன்னிபுதன்-9 சிங்காதித்தன-5, கடகசந்திரன-21, மிதுனபுதன்-9, ரிஷபவெள்ளி-16, மேஷச்செவ்வாய்-7, ஆக வயது-100.

### இனி மகாதிசை

சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ராசா 6 சனி 19 புதன் 17 கேது 6 சுக்கிரன் 20 ஆக வயது 120.

இந்நாளிற் பிறந்தவனுக்கு முகத்தில் மறுவாவது தலையில் வடுவாவதுண்டு.

இவன் கல்வியில் விருப்பமுள்ளவன், கண்ணும் கையும் அழகன். குருவுக்கும் தெய்வத்துக்கும் விசுவாசன், அடக்கமுடையவன், சிறு பசியன், பாவஞ் செய்யான், இசைகேட்க ஆசையுடையவன், உறவுடையவன், பலனுடையவன், எப்போதும் நல்ல வசனத்தையே பேசுபவன், ஊதாரியாயிருப்பவன், பகையில்லாதவன்.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3—அக்கினியால் 5—வைசூரியால் 7—ஜலத்தால் 14—மிருகத்தால் 19—மருந்திடுவதால் 24—விஷத்தால் 32—ஆயுதத்தால் 45—உயரத்திலிருந்து விழுந்தால் 55—வலிப்பால் 65—வெதுப்பால் 79—விஷத்தால் கண்டம்.

இவை கடந்தால் 86 வயது சென்று பித்தங்கதித்து மரணம்.



இவை கடந்தால் 91 வயதுசென்று வைகாசி மாதம் வெள்ளிக் கிழமை பூர்வபட்சம் தசமி உத்திரமுதித்து ஏழு நாழிகையில் பித்தங் கதித்து மரணம் அல்லது விஷத்தால் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் சீமான் புத்திமான்
சந்திரன் உதயமாகில் ராஜபுருஷன் தனவான்
செவ்வாய் உதயமாகில் வீரன் வித்துவான்
புதன் உதயமாகில் பண்டிதன்
வியாழம் உதயமாகில் புலவன் மந்திரி
வெள்ளி உதயமாகில் முடவன் சத்துருவை ஜெயிப்பவன்
சனி உதயமாகில் கள்ளன் கடையன்
ராகு உதயமாகில் கோளன் மூர்க்கன்
கேது உதயமாகில் சோம்பன் தேசாந்திரி
இந்நாளில் ஞாயிறு கூடில் மழையுண்டு
மாதம் பிறக்கில் அகந்தாழும்

சுரந்தோன்றில் 16 நாழிகையில் விடும், விடாதிருந்தால் நெய்யி னல் ஓமஞ் செய்து தயிருஞ் சோறும் பெலியிடவும்,

ஊர்வழி போகில் பால்குடித்துப் போகவும்.

இந்த நட்சத்திரம் உச்சமாகில் தனுசில் அரைநாழிகை செல்லும்

நாபிராஜ்ஜு

உத்திர நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

---

# அஸ்த நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

பூ-ஷ-ண-ட-அஸ்தம்

இந்நாளின் பலன்

மெத்தெனநடையனுகும் வெகுளியதுடையனுகுஞ்
சித்தமதுடையனுகுஞ் சிறுகுறியாளனுகு
முத்தகுணத்தனுகு முறுதியையினிதாயுன்னு
மத்தமேதேடவல்ல னத்தனுடோன்றினுனே

இந்த நட்சத்திரம் கைத்தலம்போலிருக்கும்

இது உச்சமானல் தனுசில் மூணரை நாழிகை செல்லும்.

இந்நாளினுக்கு

யோனி-எருமை பட்சி-பருந்து விருட்சம்-அத்தி கணம்-தெய்வம் தெய்வம்-ஆதித்தன் சாதி-பிராமணன் பூதம்-தேயு கோத்திரம்-அகஸ் தியன் வெள்ளிக்கிழமை-ஜென்மவாரம் பொருத்தம்-10, கிழக்கு தெற்கு வாசல் விடுவது.

இந்நாளினுக்கு 22 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷ புருடாசி மாதா சூனியம்.

இவன் வார்த்தையில் வல்லவன். ஆயுதம்பிடிக்க தீரன். இவனுக்கு மார்பு அகன்றிருக்கும், புறவடி உயர்ந்திருக்கும். அழகன் புத்திமான், மேதினியில் விளங்கி வாழ்வான். விரும்பமுடையவன் வித்தையுடையவன், குருவுக்கு நல்லவன் நீராட உவந்தவன் சிறு பகியாளன் பலனையும் ரட்சிப்பவன் கோபித்தவுடனே ஆறுவன் ராஜபிரதாபமுடையவன்.

## முதற்கால் மேஷச் செவ்வாயின் பலன்

குறுகியவுருவமெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன் பெண்மேன் மனமதுசார்கில்லான்
முருகியகொடுமைசெய்பு மூர்க்கினின் மறுவுமுண்டாஞ்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே

## இதற்குக் காலசக்கரம்

மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 ஆகவயது 100.

## இரண்டாங்கால் ரிஷபவெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்லன் சேயிழைபாரைப்பேணு
மொள்ளியகண்ணில்வேளா னொண்பொருட்கிழவனாகும்
பள்ளியும்பலவும்கற்கும் பாக்கியமுடையனாகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே

## இதற்குக் காலசக்கரம்

மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம்வெள்ளி 16 கன்னிபுதன் 9 கடகசந்திரன் 31 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ஆகவயது 85.

## மூன்றாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாதுருவமாகு மனம்பொருக்கரியவொண்ணான்
றூதுசேர்குழலாடன்மேற் றன்பொருட்சாரகில்லான்
மாதருவலக்கைவேலான் மாலினங்கிசத்தினனே

## இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 ஆகவயது 83.

## நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்பெரியனுகு
மலைதனுவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
பலகலைநன்குகற்றும் பாக்கியமுடையனுகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்திறனே

### இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னியாபுதன் 9 துலாம் வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 ஆகவயது 96.

### இனி மகாதிசை

ராஜா 16 சனி 19 புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ஆகவயது 120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

3—தண்ணீரால், 5—விருட்சத்தால், சுரத்தால். 25—கள்ளரால் 33—மிருகத்தால், 48 ராஜாவால் 50—வாதத்தால்57—வஞ்சனையால் 68—வியாதியால் கண்டம்.

இவை கடந்தால் 86 வயதுசென்று புரட்டாசி மாதம் செவ்வாய்க்கிழமை பூர்வபட்சம் திரயோதசி அஸ்தநாளுதித்து ஒரு நாளிகையில் மரணம்.

இவை கடந்தால் புரட்டாசி மாதம் வெள்ளிக்கிழமை பூர்வபட்சம் பிரதமை அஸ்தநாளுதித்து மூன்றுநாளிகையில் மரணம்.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் சீமானும்
சந்திரன் உதயமாகில் பட்டத்துக்குடையவன்
செவ்வாய் உதயமாகில் சேவகன்
புதன் உதயமாகில் வித்துவான்
வியாழம் உதயமாகில் ராஜபுருஷன்
வெள்ளி உதயமாகில் ஸ்திரீயுடையவன் குருடன்
சனி உதயமாகில் பூமி பலிதமுடையவன்
ராகு உதயமாகில் பித்தனுவன்
கேது உதயமாகில் புத்தியுடையவன் தபசியாம்
இந்நாள் நமஸ்காரம்பண்ண மனைகோல நன்று
வர்னத்தில் வில்லிடில் 23 நாழிகையில் மழைபெய்யும்.
மாதம் பிறக்கில் அகந்தாழும்

இந்நாளில் சுரந்தோன்றில் 6 நாழிகையில் விடும். விடாதிருந்தால் செய்யினுல் வேதமந்திர ஓமஞ்செய்து விருச்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் தேவதையை நோக்கி தயிருஞ்சோறும் பலியிடவும்.

இந்நாளிற பிறந்தவன் நெல்லு தின்றுஊர்வழி போகவும்.

அஸ்தநட்சத்திர பலன் முற்றிற்று.

---

# சித்திரை நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

பெ-போ-ரா-ரீ-சித்திரை

### இந்நாளின் பெயர்

கடுகியேநடக்கவல்லன் கனறியமனத்தனாகு
மிடுக்கனாங்காலந்தன்னி லீன்றதாய்தந்தைபேணுந்
துடியிடைமைந்தர்மாதர் சுகங்களுஞ்சுகிக்கவல்லன்
திடமதுபேசவல்லன் சித்திரைநாளினானே

இந்நட்சத்திரம் உச்சமாகில் தனுசில் 5 நாழிகைசெல்லும்.

இந்நாளினுக்கு யோனி-ஆண்புலி, பட்சி-வான்கோழி, விருட்சம்-வில்வம், கணம்-ராக்ஷதன், தெய்வம்-இந்திரன், பூதம்-தேயு, க்ஷேத்திரம்-அக்கினி, யோனி-சாமுண்டி, வெள்ளிக்கிழமை-சென்மவாரம், ராசி-முன்னரை புதன், பின்னரை-துலாம், பொருத்தம் 7, கிழக்கு வாசல் விடுவது.

இந்நாளினுக்கு 20 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம்.

இந்த நாளிற் பிறந்தவன் அழகுடையவன், புத்திமான், ஸ்திரீ கண்ணன், வீண்சொல் பொருன் கோபமுடையவன், மார்பு அகன்றிருக்கும். வார்த்தை சொல்ல வல்லவன், தன்வார்த்தை மேலாயிருப்பன், பொருள்தேடி அழிக்கவல்லன, அரையிலாவது முகத்திலாவது மறுவுண்டு.

### முதற்கால் சிங்காதித்தன் பலன்

நீளியசெய்யசால னிபுணனாய் கல்விகற்று
மாளிகைமனையில்வாழு மன்னரால்மகிழ்ச்சியுண்டாம்
வேளிசேர்கண்ணியன்பன் வேல்திசைமருங்குவேலான்
காளிசேர்வடிவனாகுங் கதிரவன்காலினானே

### இதற்குக் காலசக்கரம்

விருச்சிக செவ்வாய் 7 துலாம்வெள்ளி 16 கன்னியாபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 4 மீனவியாழம் 10 ஆகவயது 110.

### இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மன்னராலருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோன்றியதிசையுந்தோற்று
மந்தரப்பொய்கள்சொல்லா னரும்பொருணொரும்வோழும்
புத்தியிற்பெரியனாகும் புதனிணங்கிசத்தினானே.

### இதற்குக் காலசக்கரம்

கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 ஆகவயது 85.

### மூன்றாங்கால் துலாம் வெள்ளியின் பலன்

மார்பகன் றுயர்ந்தமெய்யன் மதிமுகமறுவுமுண்டாஞ்
சீர்தருமுத்திபேணுஞ் சிறுகுறியாளனாகு
மாதரவுடையனாகு மறிவுடனன்றிகற்குஞ்
சார்வதுமாதர்தம்மாற் றரும்புகர்காலினனே

### இதற்குக் காலசக்கரம்

துலாம்வெள்ளி 16 விருச்சிகசெவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகர சனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷச் செவ்வாய் 7 ரிஷப வெள்ளி 16 மிதுனபுதன் 9 ஆகவயது 83.

### நாலாங்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன் னுடையனாகுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழுஞ் சிறுகுறியாளனாகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கலநல்லவனாகு
மெட்டெனவொன்றும்வேண்டா னெறியினங்கிசத்தினனே

### இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிம்மாதித்தன் 5 மிதுன புதன் 9 ரிஷப வெள்ளி 16 மேஷச் செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகர சனி 4 தனுசுவியாழம் 10 ஆகவயது 86.

### இனி மகாதிசை

செவ்வாய் 7 ராகு 18 ராசா 16 சனி 19 புதன் 17 கேது 7 வெள்ளி 20 சூரியன் 6 சந்திரன் 10 ஆகவயது 120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

5—வயிற்றுக்கட்டு வெதுப்பால் 7—வைசூரியால் 12—நாலுகால் மிருகத்தால் 14— உயரத்திலிருந்து விழுவதால் 18—தண்ணீரால் 22—மருந்திடலால் 27—அரையாப்பால் 25 சுழல்வாதத்தால் 48 நெருப்பால் 64— வாதத்தால் கண்டம்.

இவை கடந்தால் 96 வயதுசென்று பூர்வபட்சம அஸ்தமி சித்திரை நாளுதித்து 3 நாளிகைக்கு மேல் காலெரிப்பால் மரணம்.

### இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் மிடியன்
சந்திரன உதயமாகில் ராஜபுருஷன்
செவ்வாய் உதயமாகில் குட்டையன் கோளன் பாதகன்
புதன் உதயமாகில் பண்டிதன் பாடவல்லன்
வியாழம் உதயமாகில் மந்திரியாவன்
வெள்ளி உதயமாகில் மிடியன் வாகனமுடையவன்
சனி உதயமாகில் மிடியன்
இராகு உதயமாகில் கலகன்
கேது உதயமாகில் கோளன்
மாதம் பிறக்கில் அகந்தாழும்
சுரந்தோன்றில் 7 நாழிகையில் விடும்.

விடாதிருந்தால் பஞ்சவர்ணச் சோறு பலியிட்டு வேதமந்திரத்தால் ஓமஞ்செய்து அடுத்தவிருட்சத்தடியில்தேவதையை நோக்கி பலியிடவும்.

இந்நாளில் ஊர்வழிபோக நேரிட்டால் நல்லெண்ணெய் சாப்பிட்டுப் போகவும்.

சித்திரை நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று.

# சோதி நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

ரு-ரே-ரோ-தா-சோதி

### இந்நாளின் பலன்

சொல்லவும்வல்லனுஞ் சொரிபடுங்கையனு
மில்லையென்றுரைக்கமாட்டா னினியசொற்புகழுந்தேடு
மல்லலேபலவுஞ்செய்வ னுயுதம்பிடிக்கவல்லன்
தொல்லுரைபலவுங்கற்குஞ் சோதிநாளோன்றினனே

### இந்நாள்கொண்ட துலா ராசியின் பலன்

கற்றறிந்தோர்க்குநல்லன் கடக்கவேகொடுமைசெய்யான்
வெற்றியுமுடையனவன் வெகுளிசொல்லுடையனாகும்
வித்தைகள்பலவுங்கற்று வீணையும்பாடவல்லன்
சுற்றமுங்கிளையும்வாழுந் தய்யனோர் துலாத்தினனே

### இந்த நட்சத்திரம் துலாம்போலிருக்கும்

இது உச்சமாகில் மகரத்தில் ஒண்ணரை நாழிகை செல்லும்

இந்நாளினுக்கு யோனி-கிடா, பட்சி-தேன் ஈ, விருட்சம்-மருத மரம், கணம்-தெய்வம், ஜாதி-வைசியன், தெய்வம்-வாசுகி, பூதம்-அக்கினி, கோத்திரம்-இந்திரன், யோகினி-மகேஸ்வரி, வெள்ளிக்கிழமை-ஜென்மவாரம், பொருத்தம் 7, தெற்கு வாசல்விடுவது.

இந்நாளினுக்கு 14 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம்.

ஐப்பசி மாதம் சூனியம்.

இந்நாளிற் பிறந்தவன் தெய்வபக்தியுடையவன். புறகாலு உள்ளங்கால் உயர்ந்திருக்கும், குணவான் விசுவாசி. தன்ஜாதிப்பிறப்புகளுக்கு நல்லவன் போஜனப் பிரியன்; ஸ்திரீ கண்ணன், துடையில் மறுவுண்டு, உடம்பு பருத்திருக்கும் குள்ளனுமிருப்பன் புத்திரனுண்டு.

### முதற்கால் தனுசு வியாழத்தின் பலன்

பொருள்சேர் மைந்தர் மனையாளைப் பொருளென்றெண்ணன் புகழ் விளங்குஞ் சிறிதேயொன்றும் பொய் சொல்லான் சிறந்தகண்

ணன், செறிதழலான் அறிவுமிக பெருங்குணத்தா னடைந்தோர்க் கன்பழகியவனும வெறிசேர்கூந்தன மடமாதே வியாழக்காலிற் பிறந்தானே.

இதற்குக் காலசக்கரம்

மேஷசெவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 ஆக வயது 100.

இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருளொருங்கிவாழுஞ்
சீரியசெய்வதல்லாற் சிதையவேசெய்யவேண்டானை
வாரியாய்பொய்கள்சொல்வன் மனம்பொறுக்கரியவொண்
காரியங்குசலனாகுங் காரியங்கிசத்தினானே (ணன்

இதற்குக் காலசக்கரம்

மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 கன்னிபுதன் 9 கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ஆகவயது 85.

மூன்றாங்கால் கும்பசனியின் பலன்

ஊனமதுடையனொரு முறைவொடுபகையுமெண்ணான்
மானமதுடையோனாகும் வழக்கறிந்துரைக்கவல்லன்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லன்
கானகந்திரிநதுவாழுங் காரியங்கிசத்தினானே

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி 16 மேஷச் செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 மேஷச் செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 ஆகவயது 83.

நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மதிமுகமறுவுண்டென்று
மேந்தியகுலத்திற்கெல்லா மிசைந்ததோருருவுமாவன்
காய்ந்தபின்னடக்கமாட்டான் கனங்குழலாற்கு நல்லன்
சேர்ந்தவர்க்கன்பனாகுஞ் செய்யபொற்காலினானே

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 துலாம் வெள்ளி 16 விருச்சிகசெவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 ஆக வயது 86.

இனி மகாதிசை

ராகு 18 ராசா 16 சனி 19 புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ஆகவயது 120.

இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

8—வெதுப்பால் 5—வைசூரியால் 7—நாற்கால் மிருகத்தால் 12—விஷத்தால் 15—உதிரவியாதியால் 25—ஸ்தரிகளால் 29—மருந்திடலால்

35—ராஜபடையால் 40—மிருகத்தால் 47 முள்ளால் முழங்கால்வாதத்தால் 54—நீரழிவால் 65—வயிற்றுக் கடுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 73 வயது சென்று ஐப்பசி மாதம் சனிக்கிழமை பூர்வபட்சம் ஏகாதசி திருவாதிரை யுதித்து 20 நாழிகைக்கு மேல் தலைக்குத்தால் மரணம்.

இவனுக்கு

சூரியன் உதயமாகில் வியாபாரி
சந்திரன் உதயமாகில் சீமான் பலருக்கும் நல்லவன்
செவ்வாய் உதயமாகில் கோபமுடையவன்
புதன் உதயமாகில் பண்டிதன்
வியாழம் உதயமாகில் ராசனுவான்
வெள்ளி உதயமாகில் வேளாண்மை செய்பவன்
சனி உதயமாகில் கள்ளன் வல்லவன்
ராகு உதயமாகில் தேசாந்திரி
கேது உதயமாகில் புருடன் விகாரி
இந்நாளில் வாரைத்தில் வில்லிடில் மழையுண்டு

இந்நாளில் மாடுகொள்ள பொன்பூண கோடியுடுக்க தானம் பண்ண வித்தைசொல்ல நன்று.

பெண்திரளில் பிள்ளையுண்டாம்.

மாதம் பிறக்கில் அகந்தாழும்.

இந்நாளில் சுரந்தோஷமிது 16 நாழிகையில் விடும். விடாதிருந்தால் கோதுமையரிசி வேதமந்திரத்தால் ஓமஞ்செய்து விருட்சத்தடியில் அல்லது நீர்க்கரையில் தேவதையை நோக்கி பெலியிடவும்.

இந்நாளில் பிறதேசம்போக நேரிடில் நெல்லரிசி தின்று போகவும்.

சோதி நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று,

---

# விசாக நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

---

நி-நா-தே-தோ-விசாகம்

இந்நாளின் பலன்

ஈன்றதாய்தந்தைபேணு மின்பமேதேடவல்ல
னீண்டதத்துவத்தைப்பேணு நீதியுமுடை யனுகு
மீண்டுரையொன்றுஞ்சொல்லான் வெட்டெனப்பேசவல்லன்
வேண்டியபேர்க்குநல்லன் விசாகநாட்டோன்றினுனே.

இந்த நட்சத்திரம் சுளகுபோலிருக்கும்.
இது உச்சமாகில் மகரத்தில் 4 நாழிகை செல்லும்,

இந்நாளினுக்கு யோனி-பெண்புலி, தெய்வம்-காலி பூதம்-அக்கினி, பட்சி-வல்லக்குருவி விருட்சம்-விளா கணம்-மனுஷன் வெள்ளிக்கிழமை-சென்மவாரம்.

இந்நாளில்பெண் இரளில்விதவையாவள். வருஷம்பிறக்கில் அகந்தாழும்

இந்நாளினுக்கு 14 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம்.

இந்நாளில் வெதுப்பு தோன்றில் 20 நாழிகையில் விடும். விடாதிருந்தால் நெய்யால் ஓமஞ் செய்து கந்தபுஷ்பமும் தயிருஞ் சோறும் உளுந்தும் கலந்து நாலுமூலையில் திசை ஸ்தம்தனஞ் செய்து உடுத்தினபுடவை கம்பளி ஆடு இவைகள் தானங் கொடுக்கவும். ஆயுசு விருத்தியாகும்.

இந்நாளிற் பிறந்தவன் நீதியும் தெய்வபக்தியு முடையவன். முகம் வட்டமாயிருக்கும். அழகன்.

முதற்கால் விருச்சிக செவ்வாயின் பலன்

வெட்டெனப்பேசவல்லன் வெகுளிமுன்னுடையனுகுஞ்
சிட்டரைச்சேர்ந்துவாழுஞ் சிறுகுறியாளனுகும்
பட்டயமணிந்ததோளான் படைக்கெலாந்தலைவனுகும்
வெட்டெனவொன்றுமஞ்சா னெறியினங்கிசத்தினுனே.

இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷசெவ்வாம் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 ஆக வயது 86,

இரண்டாங்கால் ரிஷப வெள்ளியின் பலன்

மார்பகன்றுயர்ந்தமெய்யன் மதிமுகமறுவுண்டென்று
சீர்தருமுத்திபேணுஞ் சேய்தருங்கொடுங்கண்ணுள
னுதரவுடையனுகு மறிவுடனறிவுகற்குஞ்
சார்வதுமாதர்தம்பாற் றரும்புகர்ககாலினுனே

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசு வியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம் வெள்ளி 16 ஆகவயது 83.

மூன்றுங்கால் மிதுனபுதன் பலன்

மந்திரமறைகள்கற்கு மாதராலருளுமுண்டாஞ்
சுந்தரப்பலன்கள்சொல்லுந் தோளிலைதிசையுமுண்டா
மந்திரப்பொரம்கள்சொல்லா னரும்பொருணெருங்கிவாழும்
புத்தியிற்பெரியனுகும் புதனினங்கிசத்தினுனே

இதற்குக் காலசக்கரம்

கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடக சந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷசெவ்வாம் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 ஆக வயது 85.

### நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையது தடியனாகுந் தன்மனம்பெரியனாகு
மலைதருங்வல்லபந்தன் வடிவுடன் சிறந்தமேனி
கலைபலநன்றிகற்குங் கடிமதிக்காளையாகு
மலையெனவளர்ந்த தோளான் மதியினங்கிசத்தினானே

### இதற்கு காலசக்கரம்

மீனவியாழம் 0 கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாபவெள்ளி 16 கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன 21 ஆக வயது 86.

### இனி மகாதிசை

ராசா 6 சனி 19 புதன் 17 கேது 7 வெள்ளி 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ஆகவயது 120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

5—சிலந்தியால் 7—நெருப்பால 33—நீர்பட்டால் 40—மிருகத்தால் 55—ஆயுதத்தால் குலைநோயால் 66—பித்தவாதத்தால் 68—பித்தபாண்டால வெதுப்பால் கண்டம்.

இவை கடந்தால் 86 வயதுசென்று ஆவணி மாதம் பூர்வபட்சம் திரயோதசி செவ்வாய்க்கிழமை விசாகமுதித்து 4 நாழிகையில் வெதுப்பு சிலேத்துமம இளைப்புநோன்றி மரணம்

### இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சீமானாவான்.
சந்திரன உதயமாகில் தனவான
செவ்வாய் உதயமாகில் விலங்குபூணுவன்
புதன் உதயமாகில் வேளாண்மை செய்வன்
வியாழம் உதயமாகில ராஜபுருஷன்
வெள்ளி உதயமாகில் வேளாண்மை செய்வன்
சனி உதயமாகில் கள்ளன
ராகு உதயமாகில் தபசியாவன்
கேது உதயமாகில் துஷ்டன்

நாபிரஜ்ஜை விசாகநட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

---

# அநுஷ நட்சத்திரத்தின்

## அதிதேவதை முதலியவைகள்

### நா-நீ.நூ-நே-அநுஷம்

### இந்நாளின் பலன்

கார்பரிகளிறும்போலே கடுஞ்சொற்கள்பேசவல்லன்
சீரியசெய்யவேண்டான் செந்தமிழ்க்கொன்றுமீயான்
றாரனையிருக்குஞ்சால துக்கமுஞ்சொல்லவல்ல
னூரவேசெய்வதெல்லா மனுஷனுடோன்றினனே

இந்நாளினுக்கு தெய்வம்-சூரியன், பூதம்-வாயு, ஜாதி-அனுலோமன், யோனி-மான். பட்சி-சக்கிரவாகப்புள், விருட்சம்-மகிழ், கணம்—தெய்வம், யோனி-பிராமணி, செவ்வாய்க்கிழமை-சென்மவாரம்.

இந்நாளில் பிறக்கில் அகமேறும்.
கார்த்திகை மாசம சூனியம்.
இந்நாளிற்கு 14 நாளிகைக்கு மேல் 4 நாளிகை விஷம்.
இந்நாளில் வெதுப்பு தோன்றில் 9 நாழிகையில்விடும். விடாதிருந்தால் நெய்யால் ஓமம்பண்ணவும்.

இவன் கண்ணழகன் பெணசாதி விருத்தியுள்ளவன். தெய்வம் பிராமணாள் ஆசாரியார் மாதா பிதா வித்துவான இவர்கட்கு நல்லவன். தன்னையடைந்தபேருக்கு இரக்கமுடையவன். மூக்குநுனி உயர்ந்திருக்கும் புத்தியுடையவன.

முதற்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனுகுந் தன்மனம்மெரியனுகு
மலையனவளர்ந்ததோளான் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்றிகற்குங் கடிமதக்காளையாகு
மலைதரும்வல்லபத்தன் மதியினங்கிசத்தினனே.

இதற்கு காலசக்கரம்

மீனவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிகசெவ்வாய் 7 ஆகவயது 100.

இரண்டாங்கால் கன்னிபுதன் பலன்

மேதையாலங்கசாளன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாலுருவமாகு மனம்பொருக்கரியவொண்ணுன்
ரூதுசேர்குழலினர்க்குத் தன்மனம்சாரகில்லான்
காதலுமுடையனுகுங் கன்னியங்கிசத்தினனே

இதற்கு காலசக்கரம்

மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 மீனவியாழம் 10 மேஷச் செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 ஆகவயது 83.

மூன்ருங்கால் துலாம்வெள்ளியின் பலன்

தெள்ளியசெய்யநல்லன் சேயிழைபாரைப்பேணு
மொள்ளியகண்ணில்வெள்ளா ரொண்பொருட்கள்வனுகும்
பள்ளியும்பலவும்கற்கும் பாக்கியமுடையனுகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே

இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கன்னிபுதன் 9 துலாமவெள்ளி 16 விருச்சிகசெவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 ஆகவயது 85.

## நாலாங்கால் விருச்சிகசெவ்வாயின் பலன்

குறுகியவுருவமெய்யன் குறளை சேர்குதலைவாயன்
மருவியமனத்தன் பெண்மேன் மனமதுசாரதில்லான்
முருகியகொடுமைசெய்யு முதுகினிற் சுளியுமுண்டாஞ்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினானே

## இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம்வெள்ளி 16 கன்னிபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 ஆகவயது 100.

## இனி மகாதிசை

சனி 19 புதன் 17 கேது 7 சுக்கிரன் 20 சூரியன் 9 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ராசா 16 ஆக வயது 120.

## இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

4—சிலந்தி வெதுப்பால் 7—வெதுப்பால் 13—நாய்கடியால், சீரால் 22—ஸ்திரீகளால் மருந்திடலால் 28—நாற்கால் மிருகத்தால் 33—சத்துருவால் விஷத்தால் 40—வயிற்று நோயால் 44—முழங்கால் வாதத்தால் நீர்பட்டால் 55—மண்டைவியாதியால் 65—வெதுப்பால் 83—வெதுப்பு வயிற்றுநோயால் கண்டம்.

இவை கடந்தால் 100 வயதுசென்று வைகாசி மாதம் அமரபக்ஷம் அஷ்டமி செவ்வாய்க்கிழமை அனுஷமுதித்து 7 நாழிகையில் மரணம்.

## இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் சேதுபதி
சந்திரன் உதயமாகில் தனவான்
செவ்வாய் உதயமாகில் துஷ்டன்
வியாழம் உதயமாகில் ராஜனுவான்
வெள்ளி உதயமாகில் வேளாண்மை செய்வன்
சனி உதயமாகில் குள்ளன்
ராகு உதயமாகில் முடவன்
கேது உதயமாகில் சோரன்

இந்த நட்சத்திரம் உதித்தால் கும்பத்தில் இரண்டு நாழிகை செல்லும், முதற்கால் பிதாவுக்கு அரிஷ்டம்.

சங்கரஜ்ஜ

அனுஷ நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

---

# கேட்டை நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

நேர்-யா.யீ-யூ-கேட்டை

### இந்நாளின் பலன்

வலியபோரதுவிரும்பான் வருவினைபொருந்திவாழும்
வலினமுமிகவுண்டென்று மிகுந்தகோர்தானஞ்செய்வான்
கலையதுவுடையனாகுங் கனமிகுபெரியனாகுஞ்
சிலையொருதுடையனாகுங் கேட்டைநாடோனறினே

இந்நாளினுக்கு தெய்வம்-சந்திரன், பூதம்-வாயு ஜாதி-பிரதிலோபன், கோத்திரம்-வைசியன், யோகினி-கௌமாரி, யோனி-கலைமான், பக்ஷி-சக்கிரவாகப்புள், விருட்சம்-பலா, கணம்-ராக்ஷதன்.

கார்த்திகை மாதம் சூனியம்.

வருஷம் பிறக்கில் அகந்தாழும்,

இந்நாளினுக்கு 30 நாளிகைக்கு மேல் 4-நாழிகை விஷம்.

இந்நாளில் வெதுப்பு தோன்றில் 20 நாழிகையில் விடும். விடாதிருந்தால் விழலரிசியும் எலுமிச்சம் வித்துங்கூட்டி நெய்யினால் ஓமஞ் செய்யவும்.

இந்நாளிற் பிறந்தவன் அழகியன், செறிந்த குழலுடையவன், மூக்குநுனி உயர்ந்திருக்கும். வித்துவான்களுக்கு நல்லவன். தின்னும் பண்டம வேண்டியிருப்பவன். வலதுபுயத்தில் மறுவுண்டு, கல்வியுடையவன், சிவந்தமேனியன்.

இந்நாளில் பெண்திரளில் விதவையாவாள்.

### முதற்கால் தனுசுவியாழத்தின் பலன்

மாந்தளிர்போலுமேனி மனதுடன்கல்விகற்கு
மேந்தியகுலத்துக்கெல்லா மிசைநதிதோரரசனாவன்
காய்ந்தபிணடக்கமாட்டான் கனங்குழலார்க்குநல்லன்
சேர்ந்தவர்க்கனபனாகுஞ் செம்பொனங்கிசத்தினானே

### இதற்குக் காலசக்கரம்

மீனவியாழம் 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவவாய 7 ஆகவயது 100.

### இரண்டாங்கால் மகரசனியின் பலன்

ஊனமதுடையனாகு மூவந்தவர்க்குரைக்கவல்லன்
மானமதுடையனாகு மனம்பிறர்க்கரியவொண்ணான்
மேனியுமுருவுநல்லன் மிக்கதோரறிவுமில்லை
கானகந்திரிந்துவாழுங் காரியினங்கிசத்தினானே.

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷசெவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 மேஷசெவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 ஆகவயது 83.

### மூன்ருங்கால் கும்பசனியின் பலன்

ஆரையுமறிந்துபேணு மரும்பொருட்கன் பனுகுஞ்
சீரியசெய்யவேண்டாஞ் சிலவதுசெய்யன் மிக்க
வாரியாய்பொய்கள்சொல்லான் வழகநறிந் துரைக்கவல்லன்
காரியங்குசலனுரும் காரியங்கிசத்தினு னே

### இதற்குக் காலசக்கரம்

மிதுனபுதன் 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 கன்னிபுதன் 9 துலாம்வெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 ஆகவயது 85.

### நாலாங்கால் மீனவியாழத்தின் பலன்

சீறிதேயொன்றும் பொய்சொல்லான் சிவந்தகண்ணன்கறுகுழலா
னறிவுமிகவேபெறுங்குணத்தா னடைந்தோர்க்கன்பனாழகியனும்
பொருள்சேர்மைந்தன்மனையாளைப் பொருளென்றெண்ணுன்புகழ்வினங்கும்
வெறிசேர்கூந்தன்மடமானே விய முக்காலிற்பிறந்தானே

### இதற்குக் காலசக்கரம்

தனுசுவியாழம் 10 விருச்சிக செவ்வாய் 7 துலாம்வெள்ளி 16 கன்னிபுதன 9 சிங்காதித்தன் 5 கடகசந்திரன் 21 மிதுனபுதன் 9 ரிஷபவெள்ளி 16 மேஷசெவ்வாய் 7 ஆகவயது 100.

### இனி மகாதிசை

புதன் 17 கேது 7 சுக்கிரன 20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7, ராகு 18 ராசா 16 சனி 19 ஆகவயது 120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

4—உதிரவியாதியமல் கண்ணேயால் 7—நாய்கடியால் 13—விஷத்தால் 16—எரிவால் 21—நீரால் 22—ஸ்திரீகளால் 30—குலே நோயால் 50—சிரங்கால் கண்ணேயால் 53—வெதுப்பு வயிற்றுநோயால் கண்டம்:

இது கடந்தால் 60 வயதுசென்று கார்த்திகை மாதம் அமரபக்ஷம் திரையோதசி செவ்வாய்க்கிழமை கேட்டைநாளுதித்து 5 நாழிகையில் வெதுப்புதோன்றி மரணம.

### இவனுக்கு

சூரியன் உதயமாகில் சேனுதிபதி
சந்திரன் உதயமாகில் மந்திரி
செவ்வாய் உதயமாகில் உத்தியோகஸ்தன்
புதன் உதயமாகில் கல்விமான்
வியாழல் உதயமாகில் பண்டிதன்
வெள்ளி உதயமாகில் வியாபாரி

சனி உதயமாகில் கோளன்
இராகு உதயமாகில் இரந்துண்போன்
கேது உதயமாகில் ரோகி

இந்த நட்சத்திரம் உச்சமாகில் கும்பத்தில் ஒன்னரைநாழிகை செல்லும்.

இந்நாளில் பிள்ளையாவது பெண்ணாவது பிறந்தால் தாய் தந்தை மாமன் இவர்களுக்குத் தோஷம்.

இதற்குப் பரிகாரம் ஆவின்பால் சிவாலயங்களுக்கு அபிஷேகஞ் செய்து நெய் தாமரைநூலால் தீபம்வைத்து பிராமணனுக்குப போஜனஞ் செய்வித்து திருவள்ளுவருக்கு அபிஷேகதானஞ் செய்யவும்.

பாதரஜஜு
கேட்டை நட்சத்திரத்தின் பலன் முற்றிற்று

# மூல நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

யே-யோ-பா-பி-மூலம்

### இந்நாளின் பலன்

அகலியசொல்லவல்ல னயுகாபிடிக்கவல்லன்
சுகமுறு சிறுவனாகுஞ் சுற்றமுஞ்சூழ்ந்துவாழு
மிகவியற்கலவிகற்கும் வேட்கைமேலிருப்பமில்லான்
முகமதுகலியனாகு மூலநாடோன்றினானே

### தனுசுராசின் பலன்

சிந்தையில்வணிகனாகுந் திருவிருமார்பனாகு
மந்தமாமழகனாகு மரிவையாவசத்தனாகுங்
கந்தமாம்பரனுகந்த காதலாய்கல்விகற்குந்
தந்தைதாய்தம்மைப்பேணுந் தக்கதோர்தனுவினானே

இந்நாளினுக்கு தெய்வம்-ஈஸ்வரன் பூதம்-வாயு யோகினி-வராகி சாதி-பிராமணன் கோத்திரம்-புலஸ்தியன யோனி-பெண்நாய் பட்சி—செம்போத்து கணம்-ராக்ஷதன் வியாழக்கிழமை-ஜென்மவாரம்.

இந்நாளினுக்கு மார்கழி மாதம சூனியம்.

20 நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம்.

இந்நாளில் சுரந்தோன்றில் 4 நாழிகையில்விடும். விடாதிருந்தால் வேதமந்திரத்தினாலே ஓமஞ்செய்து கருப்பஞ்சாற்றால் சாதம்சமைத்து பலியிடவும்.

உடுத்தின வஸ்திரம் கப்பளி ஆடு தானங்கொடுக்கவும், உளுந்தும் சோறும் கடுகும் கலந்து நாலுதிசைக்கும் பலியிடவும்,

இந்நாளிற் பிறந்தவன் ரோகமுடையவன். செய்நன்றியுடையவன் பண்டிதனாயிருப்பான வீண்சொல் பொறுன், புறவடி உயர்ந்திருக்கும். கண் செவ்வரி பரந்திருக்கும்.

முதற்கால் மேஷச் செவ்வாயின் பலன்

குருகியபுருவமெய்யன் குறளைசேர்குதலைவாயன்
மருவியமனத்தன் பெண்மேல் மனமுதுசாரமில்லான்
முருகியகொடுமைசெய்யு முதுகினிற்சுழியுமுண்டாஞ்
செறிதருகூந்தல்பேணுஞ் சேயினங்கிசத்தினனே.

இதற்குக் காலசக்கரம்

மேஷசெவவாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுனபுதன் 9 கடகசந்திரன் 21, சிங்காதித்தன 5 கன்னியாபுதன 9 துலாமவெள்ளி 16 விருச்சிக செவ்வாய் 7 தனுசுவியாழம் 10 ஆகவயது 100.

இரண்டாங்கால் ரிஷப வெள்ளியின் பலன்

தெள்ளியதியாகிநல்ல சேயிழையாரைப்பேணு
மொள்ளியகண்ணில்வெள்ளா னுருபொருணிருபனாகும்
பள்ளியும்பலவுங்கற்கும் பாக்கியமுடையனாகும்
வெள்ளியங்கிசத்தில்வந்த விருப்புளகாளைதானே

இதற்குக் காலசக்கரம்

மகரசனி 4 கும்பசனி 4 மீனவியாழம் 10 விருச்சிகசெவ்வாய் 7 துலாமவெள்ளி 16 கன்னிபுதன் 9½ கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 மிதுனபுதன் 9 ஆக வயது 85.

மூன்றாங்கால் மிதுனபுதன் பலன்

மேதையாலங்கசாலன் வேந்தரால்விருப்பமுண்டா
மாதுமாலுருவமாகு மனம்பொருக்கரியவொண்ணான்
றூதுசேர்குழலினாளே தன்பொருள்சாரமில்லான்
மீதுருவலக்கைவேலான் மிதுனவங்கிசத்தினனே

இதற்குக் காலசக்கரம்

ரிஷபவெள்ளி 16 மேஷச்செவ்வாய் 7 மீனவியாழம் 10 கும்பசனி 4 மகரசனி 4 தனுசுவியாழம 10 மேஷச்செவ்வாய் 7 ரிஷபவெள்ளி 16 மிதுன புதன் 9 ஆகவயது 83.

நாலாங்கால் கடகசந்திரன் பலன்

தலையதுதடியனாகுந் தன்மனம்பெரியனாகு
மலைதருவல்லபத்தன் வடிவுடன்சிறந்தமேனி
கலைபலநன்றிகற்கும் கடிமதக்காளையாகு
மலையெனவளர்ந்ததோளான் மதியினங்கிசத்தினனே

இதற்குக் காலசக்கரம்

கடகசந்திரன் 21 சிங்காதித்தன் 5 கன்னிபுதன் 9 துலாம் வெள்ளி 16 விருச்சிகசெவ்வாய் 7 தனுசுவியாழம் 10 மகரசனி 4 கும்ப சனி 4 மீனவியாழம் 10 ஆகவயது 86.

### இனி மகாதிசை

கேது 7 வெள்ளி20 சூரியன் 6 சந்திரன் 10 செவ்வாய் 7 ராகு 18 ராசா 16 சனி 19 புதன் 17 ஆகவயது 120.

### இவன் பிறந்த ஆண்டில் கண்டம்

12—மிருகத்தால் 20—உயரமேறி விழுதலால் 34—சத்துருவால் 44—வெதுப்பால் குலேநோயால் 75—தலேநோயால் 80—பேதியால் சிலேத்துமத்தால் கண்டம்.

இவை கடந்தால் 100 வயதுசென்று ஆவணி மீ அமரபட்சம் பஞ்சமி வெள்ளிக்கிழமை மூலநட்சததிரமுதித்து 15 நாழிகையில் வெதுப்பு பித்தந்தோன்றி மரணம்.

### இவனுக்கு

ஆதித்தன் உதயமாகில் தனபதி
சந்திரன் உதயமாகில் சீமானுவான்
செவ்வாய் உதயமாகில் கோளன்
புதன் உதயமாகில் மணியக்காரன்
வியாழன் உதயமாகில் ராஜபுருஷன்
வெள்ளி உதயமாகில் வியாபாரி
சனி உதயமாகில் கோளன்
இராகு உதயமாகில் கலகன்
கேது உதயமாகில் மிடியன்

இந்த நட்சத்திரம் உச்சமானுல் கும்பத்தில் 4 நாழிகை செல்லும்.

பாதரஜ்ஜு

மூலநட்சத்திரத்தின் பலன் முற்றிற்று.

---

# பூராட நட்சத்திரத்தின்
## அதிதேவதை முதலியவைகள்

---

### பூ-தா-பா-டா-பூராடம்

### இந்நாளின் பலன்

கையதுகமனமாகுங்கருமங்கள் பலவுஞ்செய்வான்
தையலுக்கினியனுகுந் தந்தைதாய்தமக்குநல்லன்
மெய்யழகுடையனுகும் விரும்பியேகல்விகற்கும்
பொய்புரையொன்றுஞ்சொல்லான் பூராடோன்றினுனே

இந்நாளினுக்கு தெய்வம்-ஈஸ்வரன், பூதம்-வாயு, ஜாதி-வைசியன் கோத்திரம்-புலஸ்தியன், யோனி-ஆண்குரங்கு, யோகினி-வசிஸ்டன், பட்சி-வண்டலாங்குருவி, விருட்சம்-வன்னிமரம். கணம்-மனுஷன், சென்மவாரம்-வியாழக்கிழமை.

இந்நாளில் வருஷம் பிறக்கில் அகந்தாழும்.
24-நாழிகைக்கு மேல் 4 நாழிகை விஷம்.

